பாவேந்தர்
# பாரதிதாசன்



# அறுசுவை விருந்து

முல்லை முத்தையா

# முன்னுரை

"ஷேக்ஸ்பியர் இயற்றிய நூல்களைக் காட்டிலும் ஷேக்ஸ்பியரைப்பற்றிய நூல்கள் அதிகமாக வெளி வந்துள்ளன" என்று கூறுவார்கள். அதைப் போலவே பாரதிதாசனைப்பற்றியும் நூல்கள் ஏராளமாக வெளி வந்து கொண்டிருக்கின்றன. அவற்றில் ஆய்வு நூல்கள் பல. ஆய்வு நூல்கள் அனைத்தும் ஆய்வு நூல் எழுதுவோருக்கே பயன்படுமே தவிர, சராசரி வாசகர்களுக்குப் பயன்படுமா?

பாரதிதாசன் கவிதைகளைப் பற்றிய விமர்சன நூல்கள் விரிவாக வெளிவர வேண்டும் என்பது என் கருத்து. அதுவே முழுமையான நிறைவைத் தரக்கூடியது.

பாவேந்தரின் கவிதை வெள்ளத்தில் நீந்தியவர்கள் நால்வர். திருவாளர்களான சிலம்பொலி சு. செல்லப்பன் அவர்கள், கவிஞர் த. கோவேந்தன் அவர்கள், புலவர் இராமநாதன் அவர்கள், பேராசிரியர் இளவரசு அவர்கள் ஆகியவர்களே அந்த நால்வர். இவர்கள் பல ஆண்டுகளாக பாவேந்தரின் கவிதைகளோடு ஒன்றி இணைந்தவர்கள்.

இந்த நால்வரில் புலவர் இராமநாதன் அவர்கள் ஒரு நூல் எழுதியுள்ளார். மற்ற மூவரும் இதுவரை விரிவாக எழுதவில்லை. அவர்கள் எழுதினால் அவையே முழு நிறைவைத் தரும்.

விமர்சன நூல்களைப் போலவே விரிவான வாழ்க்கை வரலாற்று நூலும் வெளி வரவேண்டும். ஒருவர் மட்டுமே எழுதிவிட இயலுமா? அதுவும் பாவேந்தர் மகன் மன்னர்

மன்னன் மட்டுமே எழுதிஞல் அது முழுமையாகி விடுமா? பாவேந்தருடன் நெருங்கிப் பழகியவர்கள் பலர். அவர்களில் சிலர் இன்று இல்லே; அவர்கள் எதையும் எழுதவில்லே; அவ்வப்போது சில நிகழ்ச்சிகளே மட்டும் கூறியுள்ளனர். அதுவும் பலருக்குத் தெரியாது.

பாரதிதாசனுடன் பலரும் ஒவ்வொரு சந்தர்ப்பத்தில் சில ஆண்டுகள் நெருங்கிப் பழகியிருக்கிருர்கள். அவர்களில் பலர் இன்றும் இருக்கின்றனர். அவர்களே எல்லாம் எளிதில் ஓதுக்கிவிட எண்ணுவது பண்பும் அல்ல; புத்திசாலித்தனமும் ஆகாது. இதில் சுயநல நோக்கு ஊடாடக் கூடாது. ஒவ்வொருவரும் ஒவ்வொரு வகையில் பாவேந்தரோடு பழகியும் உதவியும் இருக்கின்றனர். ஒத்துழைப்பு நல்கியும் உள்ளனர். அவர்களே மறந்துவிடுவதும் 'இருட்டடிப்பு'ச் செய்வதும் நன்றி மறந்த செயலாகும்.

எதற்கும் விளம்பரத்தைத் தேடி ஓடும் காலம் இது! எதற்குமே 'தான் தான்' என தன் தலேயை நீட்டிக்கொண்டு திரிபவர்கள் மலிந்துள்ளனர். இவற்றுக்கெல்லாம் நான் அப்பாற்பட்டவன். விளம்பரத்தையே விரும்பாதவன். அமைதியாகவும் அடக்கமாகவும் இருந்து அவ்வப்போது என்னுல் இயன்ற பணிகளேச் செய்து மனநிறைவு கொள்பவன்.

பாவேந்தர் பாரதிதாசன் நூல்களே நான் முதலில் பதிப்பித்து வெளியிட்டேன் என்பதாக தமிழக அரசுக்கு சில உத்தமர்கள் பரிந்துரைத்து, 1979 ஏப்ரல் 29ல் பாவேந்தரின் 89வது பிறந்தநாள் விழாவில் எனக்குப் பரிசும் விருதும் பட்டாடையும் கிடைக்கச் செய்தார்கள். ஆயினும் இவற்றை உத்தேசித்து அப்பொழுது 1944ல் நான் செயல்படவில்லே. என்ருலும் உண்மையை உணர்ந்து மதிப்பளித்த சில உத்தமர்களும் இருக்கிருர்களே என்பதை எண்ணும்போது உள்ளம் உவகையில் விம்மிதம் கொள்கிறது.

கவிஞர் சுரதா அவர்கள், "வஞ்சகர்கள் உண்மையை மறைக்கிறார்கள். நீங்கள் இப்படி இருக்கக் கூடாது; எல்லாவற்றையும் எழுதிவிட வேண்டும்" என மிகுந்த ஆர்வத்தோடு என்னிடம் கூறினார். மற்ற நண்பர்களும் அடிக்கடி வற்புறுத்தலானார்கள். மேலும், என் மகன் செல்வன் பழநியப்பனும் தினமும் என்னைத் தூண்டிக் கொண்டிருந்தான். அதன் விளைவே இந்நூல்!

பாவேந்தருடன் நான் உடனிருந்தபோது நிகழ்ந்தவை, கேட்டவை, அனைத்தையும் நினைவுக்குக் கொண்டுவந்து இந்த 'விருந்'தை வழங்குகின்றேன்.

பாவேந்தர் 89-வது பிறந்த நாள் விழா நிகழ்ச்சியையும், சொற்பொழிவுச் சுருக்கத்தையும் குறிப்பெடுத்து உதவிய 'தமிழரசு' துணை ஆசிரியர் புலவர் தமிழ்ப்பித்தன் அவர்களுக்கும், சிறப்புரை வழங்கிய புன்னகை தவழும் கவிஞர் கோவேந்தன் அவர்களுக்கும் இதை வெளியிடும் மணிவாசகர் நூலகத்தினருக்கும் இதய பூர்வமான நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

சென்னை-1<br>6-3-80

**முல்லை பிஎல். முத்தையா**

# சுவைக்க வாருங்கள்

1972ஆம் ஆண்டு ஒருநாள் தோழர் அவ்வை நடராசன், பேரறிஞர் நீ. கந்தசாமி அவர்களிடம் என்னை அறிமுகம் செய்து வைத்து 'பாவேந்தரின் பற்றாளர்' என்றார்.

தமிழ்ப் பெருமிதத்தின் தன்னிகரற்ற உருவமாக விளங்கிய நீ. க. "அப்படியா! மிக்க மகிழ்ச்சி. எவ்வளவு காலத் தொடர்பு?" என்றார் என்னைப் பார்த்து. "1945இலிருந்து தெரியும். 1948இலிருந்து நெருங்கிய பழக்கம்" என்று கூறினேன். உள்ளே சென்று இரண்டு நூல்களைக் கொண்டு வந்தார். ஒன்று 'பள்ளியகரப் பழங்கதை'. மற்றொன்று தாமசு கிரே என்ற ஆங்கிலப் புலவன் எழுதிய 'இரங்கற்பா.'

முதல்நூல் மிக மிகச் சிறியது. பழைய இலக்கியங்களின் பேரால் நடைபெறும் போலி இலக்கியவாணர்க்கு ஓர் அறைகூவல்போல் எழுதப்பட்ட நையாண்டி இலக்கியம். நகைச்சுவையின் சுரங்கம். அதைப் பார்த்துக் கொண்டே பாரதிதாசன் அவர்களின் நகைச்சுவை நிகழ்ச்சிகள் ஓரிரண்டைக் கூறினேன்.

நீ. க. உடனே, 'ஒன்று தெரியுமா? ஒருமுறை இரசிகமணி டி. கே. சி. இராமாயணப் பதிப்பு பற்றி பாரதிதாசனிடம் பேசிக்கொண்டிருந்தேன். உடனே பாரதிதாசன் இராமனின் வாழ்வைக் கெடுத்தவள் கைகேயி; இராமாயணத்தின் வாழ்வைக் கெடுத்தவர் டி. கே. சி. என்று கூறி 'பூசணிக்காய் மகத்துவ'ப்பாடலான காய் வண்ணம் அங்குக் கண்டேன், கறிவண்ணம் இங்குக் கண்டேன்' என்ற பாடலையும் கூறினாராம்." இதுபோல் நிகழ்ச்சிகள் பல கூறினார் நீ. க. ஒவ்வொரு நிகழ்ச்சியும் வேதனையிலிருந்து எழுந்தவையே தவிர சினத்திலிருந்து சீறிச்சிலிர்த்தவையல்ல,

தமிழகப் புலவர் குழுவின் கூட்டம் வாலாசாபாத்தில் நடந்தது. பாவேந்தருடன் உரைவேந்தர் ஒளவை துரைசாமிப்பிள்ளை, அறிஞர் இ. மு. சுப்பிரமணியனார், மொழிப் பேரறிஞர் தேவநேயப் பாவாணர் மூவரும் கூடியிருந்து உரையாடியவை அனைத்தும் இன்றும் என் நெஞ்சத்தில் சந்தனச் சிற்பம்போல மணக்கின்றன. பாவேந்தர் மூவரிடத்தும் பேசும் ஒவ்வொரு பேச்சும் திடுதிடுதிப்பென்று எழுந்த உணர்ச்சி வெள்ளமன்று, உரத்த குரலிலன்று, உரத்த சிந்தனையிலிருந்து கூர்மையான உள்ளார்ந்த உணர்ச்சித் தெறிப்புகள் ஆகும்.

பாவேந்தரின், முக்காலப் பேச்சிலும் இலக்கியம், இலக்கணம், அரசியல், சமயம் எந்தப் பேச்சும் உரையும் பாடலும் நகைச்சுவையின் நாடித்துடிப்புடன்தான் பேசும்.

பாவேந்தரின் வாழ்வு முப்பிரிவினை உடையது. வெடிப்பும் வீரியமும் நிறைந்த இளமைக்காலம்; துடிப்பும் தென்பும் தோய்ந்த இடைமைக் காலம்; நொடிப்பும் நுண்மையும் நுழைந்த முதுமைக் காலம். இந்த முக்காலத்திலும் அவரோடு பழகிய ஒவ்வொருவர்க்கும் எத்தனையோ நிகழ்ச்சிகள், எத்தனையோ நினைவுகள் இன்றும் என்றும் வாழும் கடலலை போன்றவை. அவரின் நகைச்சுவைச்சுடர் கேட்பவரின் உணர்ச்சி வானின் விளிம்புவரை சென்று மின்னலிடும் தன்மையன.

உண்ணும் சுவையின் அறுசுவையினையும் எண்ணும் சுவையின் ஒன்பதின் சுவையினும் கவிஞரின் எழுத்தும் பேச்சும் பண்ணும் சுவை பன்னூறு எனலாம்.

பாவேந்தரின் நட்புறவு நிகழ்ச்சிகள் ஒரு மொழியின், ஓர் இனத்தின் அறுபதாண்டுகாலத் தமிழக வரலாற்றுடன் இணைந்து பிணைந்தவையாகும். காலத்தின் அறுபருவத் திருக்கூத்தை உலகமொழிகள் எல்லாம் எப்படிக் காலங்காலமும் பாடி மகிழ்கிறதோ, அப்படித்தான் பாவேந்தரின் வாழ்வையும் அவருடன் பங்கு பெற்ற, பழகும் வாய்ப்புற்ற

ஒவ்வொருவரும் மணிக்கட்டில் மூளையையும், விரல்களில் கண்களையும் எழுதுகோலில் அன்பையும் தென்பையும் கொண்டு எழுதி நிரைத்தாலும் முழுமையாகாதென்றே கருதுகிறேன்.

பாரதிதாசனின் அறிவின் பேராண்மை, பகுத்தறிவின் வீறுண்மை, பாட்டின் பேராண்மை, அழகுணர்ச்சியின் சீராண்மை இவற்றின் ஒவ்வொன்றோடும் தொடர்புடையவர் ஒரு சிலரே. தனித்தனியே தொடர்புடையவர் பலர். இவர்கள் அனைவரும் ஜான்சனின் நண்பர் பாஸ்வெலாக, மார்க்சின் தோழர் ஏங்கெல்சாக, மீனாட்சி சுந்தரம்பிள்ளையின் மாணவர் உ. வே. சா ஆக மாறினாலும் பாவேந்தரின் வாழ்வை—வரலாற்றை நிறைவு செய்ய முடியுமா என்பது ஐயப்பாடே. வானினும் உயர்ந்து கடலினும் ஆழ்ந்து மண்ணினும் பரந்து விரிந்த வாழ்வு பாவேந்தருடையது.

பாரதிதாசன் தோற்றத்தில் தமிழின் விம்மிதத்தைக் கண்டவர் பெரியவர் முல்லை முத்தையா. அதைப்போல் அவர் தமிழ் ஊற்றத்தில் 'பொதுமக்கள் நலம் நாடும் புதுக் கருத்தை'ப் போற்றினார் அதனால்தான் பாரதிதாசன் 'முத்தையா என் சொத்தையா' என்று உரிமை கொண்டாடினார்.

முல்லையில் மணந்து, முல்லைப்பதிப்பகத்தில் தமிழுறவு கொண்டவர் பாவேந்தர். பிஎல். முத்தையாவை முல்லை முத்தையா என்று தலையெழுத்தையே மாற்றிய பாவேந்த ரோடு மூச்சுக்காற்றாக உடனிருந்தவர். செந்தமிழ்ப் பணிக் கெல்லாம் முந்திக் கொண்டவர். தமிழகத்தின் பல்வேறு அறிஞர்—தொழிலதிபர்— எழுத்தாளர்— கவிஞர்—செல்வர் களின் உறவெல்லாம் அவர்க்கு கிளைகளின் இலைகள் பெறும் நுகர்வென்றால் பாரதிதாசனின் உறவு ஆணிவேரும் பக்க வேரும் சல்லிவேருமாக ஊட்டம் கொண்டவர்.

கவிஞரின் ஆற்றலில் அந்தமிழ்ச் செல்வம் விளைவதை யெல்லாம் தமிழர்க்கே என்ற அருமையை உணர்ந்தவர் முல்லை முத்தையா. கவிஞரின் சீற்றத்தில் பொய்புனை சுருட்டுகள் 'தோற்றோம் தோற்றோம்' என்ற மாற்றத்தையும் கண்டவர். நாற்றிசைவாணர்க்கும் கவிஞரின் குழந்தை உள்ளத்தை காற்றிலே மிதக்கும் தென்பாங்காய்ச் செய்து வரும் முல்லை முத்தையாதான்.

கவிஞருக்கும், அவர் உள்ளத்தின் ஊற்றாயிருந்த கவிதைக் கும்—கவிதையோடு தங்களையே பிணைத்துக் கொண்ட அன்பர்க்கும் இடையில் ஊடாடியவர் முல்லை முத்தையா. கவிஞரோடு நேரடிப் பழகாதவர்க்கும் — பழகியவர்க்கும் கவிஞரின் பல்வேறு கோணங்களைக் காலத்துக்குத் தக்கவாறு இங்குச் சுருக்கமாக முத்து முத்தாக வழங்கியுள்ளார் முத்தையா.

நூலாசிரியர்—வெளியீட்டாளர் என்ற வணிக உறவை மீறிய வாழ்வுறவு கொண்டவர் நூலாசிரியர். ஆதலால்தான் நாற்றங்கால் பயிரின் நளினத்தையும் ஊற்றோடையின் பம்மலும் பாய்ச்சலும் இந்நூலின் ஒவ்வொரு பக்கத்திலும் காண்கிறோம். நுகர்கிறோம். நம்மையும் அறியாமல் மனத்தின் நினைவு நாக்குகள் அறுசுவை இன்பத்தைச் சுவைக் கின்றன. அறிவின் விழிகள் குறுநகையின் அரும்பை அலர்த்து கின்றன.

இந்நூலின் அறுசுவைக் குறிப்புகள் அப்போதைக்கப் போது தெறித்தவையே அன்றி வெறித்தவை அல்ல.

ஒரு கவிஞனின் ஒவ்வொரு கணப்பொழுதும் ஓர் உண்மைக் கவிதை; வாழ்வின் படைப்பு எனலாம். கவிஞன், தான் வாழும் காலத்தின் ஒரு பகுதியாகவும் கடந்த கால நற்பண்பின் ஒளியாகவும், எதிர்காலத்தின் குரலாகவும் விளங்குவதைக் கவிஞரோடு தொடர்புடைய ஒருவரே உணரமுடியும். அப்படி உணர்ந்த காலத்தின் அணிவகுப்புப் படப் பிடிப்புகளே இந்நூலின் அறுசுவைப் பக்கங்கள்.

பாவேந்தரோடு பழகிவிட்டவர்கட்கு, அவருடன் இருந்த நிகழ்ச்சிகளைக் கூறுவதில் தீராத வேட்கை, செந்த மூலைப்பெற்ற சந்தனக் கட்டையைப்போல் மணந்து கொண்டே இருக்கும் அதற்கொரு சான்று இந்நூல்.

முல்லை முத்தையாவின் நறுக்குகள் உணர்ச்சிப் பெருக்கின் வெள்ளத்தில் நம்மை மூழ்கடிக்காமல் சொற்சித்திரங்களாக நம்முன் தீட்டப்பட்டுள்ளன. ஒளிவு மறைவின்றி நெஞ்சத்தின் நினைவுச் சுனையிலிருந்து வாழ்வு நிகழ்ச்சிகள் தேனருவியாகக் குதித்து சாரலைப் பொழிகின்றன.

செய்தி மோப்பம் பிடிப்பதிலும், நிகழ்வின் சுவைகளை மகிழ்வோடு உண்பதிலும் முல்லை முத்தையாவுக்கு இருந்த ஆர்வமும் அக்கறையும் பழகு தமிழில் பாட்டுணர்வு மிகுந்த பாநயம் வாய்ந்த உரைநடையைத் தந்துவிட்டன. முல்லை முத்தையாவின் இந்நிகழ்ச்சிக் குறிப்புகள் பாரதிதாசனின் நடையின் எதிரொலியோ என்று திகைக்க வைக்கின்றன.

பாவேந்தரின் பல்வேறு பண்பின் பெருமையை உயிரோட்டம் மிகுந்த நாடக ஓவியங்களாக நம் முன் படைத்த முல்லை முத்தையாவின் சொல்லின் மாட்சிமை கவிஞரைக் கண்முன் நடமாடவிடும் முழுமையும் முதன்மையும் கொண்டதாகும். தமிழரின் பேரவாவினை நிறைவு செய்யும் மற்ற நிகழ்ச்சிச் சிற்பங்களையும் நம் அகவிழிக்கும் புறவிழிக்கும் கொண்டுவர வேண்டுகிறேன்.

அன்பன்,
**த. கோவேந்தன்.**

# 1

## கவிஞரின் திருமணம்

பாரதிதாசனுக்கு திருமணம் செய்து வைப்பதற்காக குடும்பத்தினர் பெண் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

கவிஞருடைய அக்காள் கவிஞரைக் கூட்டிக்கொண்டு புவனகிரிக்கு அருகில் பெருமாத்தூர் கிராமத்துக்குச் சென்றனர்.

கவிஞருக்கு அப்பொழுது வயது முப்பது. கம்பீரமான தோற்றம்; மிக அழகாக இருப்பார்.

பெண்ணைப் பார்த்தார் கவிஞர். பெண் சிறிது தொலைவில் உள்ளே நின்று கொண்டிருந்தது. கிராமத்துப் பெண்; கருப்புநிறம். கவிஞரோ பெண்ணைப் பார்த்து விட்டு, மௌனமாகவே உட்கார்ந்திருக்கிறார்.

அக்காள் கவிஞரைப் பார்க்கிறார். பிறகு பெண்ணின் அருகில் சென்றார். பெண்ணின் கண்களிலிருந்து கண்ணீர் பெருகியது. "என்னம்மா, ஏன் கண் கலங்குகிறாய்?" என்று கேட்கிறார் அக்காள். "நான் அவரையேதான் கல்யாணம் செய்து கொள்வேன்" என்று கூறுகிறது பெண்.

கவிஞரிடம் வந்து, "சுப்பு! ஏன் ஒன்றும் சொல்லாமல் உட்கார்ந்திருக்கிறாய்; அந்தப் பெண் அழுது கொண்டிருக்கிறது" என்கிறார் அக்காள்.

"ஏன் அழுது கொண்டிருக்கிறது?" என்று கேட்கிறார் கவிஞர்.

"உன்னையேதான் கல்யாணம் செய்து கொள்வேன் என்று கூறி, அழுது கொண்டிருக்கிறது" என்கிறார் அக்காள்.

"அப்படியா? ஒரு பெண் என்னையே கல்யாணம் செய்து கொள்வேன் என்று கூறுகிறதா! அப்படியானால், அந்தப் பெண்ணையே நான் கல்யாணம் செய்து கொள்கிறேன்" என்று சம்மதம் தெரிவித்து விட்டார் கவிஞர்.

பிறகு, அந்தப் பெண்ணுக்கும் கவிஞருக்கும் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. அந்தப் பெண்ணே பழனி அம்மாள்!

இருவரும் இல்லற வாழ்வை நல்லறமாகக் கொண்டு வாழ்ந்து, மூன்று பெண்களையும் ஒரு மகனையும் பெற்றெடுத்தனர்.

கவிஞர் எழுதும் கவிதைகளையெல்லாம் மனைவியார் பழனி அம்மாளிடம் முதலில் வாசித்துக் காண்பித்து விடுவார்.

## 2

## இனிமேல் அடக்கமாகத்தானே இருங்கள்!

நகரங்களிலும் சிற்றூர்களிலும் கவிஞரின் ரசிகர்கள் நிறைய இருக்கின்றார்கள். அவ்வப்பொழுது நிகழ்ச்சிகளுக்குக் கவிஞர் செல்லும் பொழுது ஆங்காங்கே உள்ள ரசிகர்கள் பிரியத்தோடு கவிஞரை அழைத்துச் சென்று தங்கள் இல்லத்தில் விருந்து அளித்து உபசரித்து மகிழ்வார்கள்.

விருந்து என்றால் கவிஞருக்கு மட்டிலா மகிழ்ச்சிதான்.

கறி, மீன், முட்டை, இறால் முதலியவற்றை மிக விருப்பத்தோடு ருசித்துச் சாப்பிடுவார்.

மதுரையில் ஒரு அன்பர் இருந்தார். அவரை கவிஞரின் 'பக்தர்' என்றே கூறவேண்டும்; [அவர் பெயர் நினைவு இல்லை.] கவிஞர் வந்திருக்கிறார் என்று கேள்விப்பட்டால் உடனே தமது குதிரை வண்டியுடன் வந்து கவிஞரை அழைத்துக்கொண்டு தம் வீட்டுக்குப் போய் விடுவார். ஓரளவு வசதி படைத்தவர்.

ஒருமுறை கவிஞரையும் என்னையும் மன்னர் மன்னனை யும் குதிரை வண்டியில் அழைத்துச் சென்றார்.

வகை வகையான உணவுப் பதார்த்தங்களை தயாரிக்கச் சொல்லி, கவிஞருக்குப் படைத்து, அவர் மகிழ்ந்தார். இதில் அவருக்கு உண்டாகும் ஆனந்தத்துக்கு அளவே இல்லை.

ஆனால், கவிஞருக்கு சில சமயங்களில் சிறிது சிரமம் ஏற்பட்டு விடும். ஏனெனில், அன்பர் வீட்டுக்குப் போய் விட்டால் குறைந்த பட்சம் மூன்று நாட்களுக்குப் பிறகு தான் விடுவிப்பார்.

நேரம் தவறாமல், "காபி குடியுங்கள்; சாப்பிட வாருங்கள்; பலகாரம் சாப்பிடுங்கள்; சிறிது நேரம் தூங் குங்கள்; பால் குடியுங்கள்,"— இப்படியாக உபசரித்துக் கொண்டே கவிஞரை திக்குமுக்காட வைத்து விடுவார். கவிஞரோ தர்மசங்கடத்தில் அகப்பட்டுக் கொள்வார். அன்பருடைய 'பக்தி சிரத்தை,' புராணங்களில் காணப்படும் 'சிவபக்த'ரைப் போல் இருக்கும்.

அன்பர் சொல்வதையோ—செய்வதையோ கவிஞர் மறுத்தால் அவர் கண்களில் நீர் ததும்பிவிடும். ஆகவே, கவிஞரும் இந்தப் 'பக்தி'க்குக் கட்டுப்பட்டுவிடுவார்.

உணவுக்குப் பின் உரையாடல் நிகழ்ந்தது; அன்பரைப் பார்த்து, "உங்களுக்கு எத்தனை குழந்தைகள்?" என்று கேட்டார் கவிஞர்.

"எட்டுக் குழந்தைகள்!" என்றார் அன்பர்

"உங்களுக்கு வயது எத்தனை?" என்றார் கவிஞர்.

"முப்பத்து ஐந்து" என்றார் அன்பர்.

'முப்பத்தைந்து—எட்டுக் குழந்தைகள்' என ஒரு முறை தனக்குள் கூறிவிட்டு, "இனிமேல் கொஞ்சம் அடக்கமாகத் தானே இருங்கள்" என்றார் கவிஞர். அவ்வளவுதான், எல்லோருக்கும் ஒரே சிரிப்பு!

"தவிப்பதற்கோ பிள்ளை?" என கர்ப்பத்தடையைப் பற்றி பாடியவர் அல்லவா? அன்பரும் சிரித்துப் புரிந்து கொண்டார்.

## 3

## ஆகிற காரியமா?

ஒரு காரியத்துக்காக, பலருடைய 'தயவை' நாடிச் சென்று அதை நிறைவேற்றிக் கொள்ளும் முறை கவிஞருக்குப் பிடிக்காது.

ஏதோ ஒரு விஷயம் பற்றி ஒரு நாள் தம்பியிடம் [மன்னர் மன்னன்] கவிஞர் சொன்னார்; தம்பி, ஸ்ரீதரன் என்பவரிடம் சொன்னார்; ஸ்ரீதரன், சுப்பிரமணியம் என்பவரிடம் சொல்லியிருக்கிறார். விஷயம் முடியவில்லை.

இதற்கு மத்தியில் ஸ்ரீதரன் வந்தார். கவிஞர் அப்போது உட்கார்ந்திருந்தார். அந்த விஷயத்தின் நிலைமையையும், முயற்சி செய்திருப்பதையும் படிப்படியாகக் கூறி விவரித்தார் ஸ்ரீதரன்.

கவிஞரின் பொறுமை அணைகடந்த வெள்ளமாயிற்று. "அதென்னப்பா, நான் தம்பியிடம் சொல்லி, தம்பி உன்னிடம் சொல்லி, அதை நீ சுப்பிரமணியத்திடம் சொல்லி, சுப்பிரமணியம் யாரோ ஒரு மயிராணிடம் சொல்லி... இதெல்லாம் ஆகிற காரியமா?'' என்று படபடத்தார்.

இப்பொழுதும் கூட, எதை முன்னிட்டேனும் யாரிடமாவது நான் முயற்சி செய்யவேண்டியிருந்தால், மேற்படி சம்பவம் உடனே என் நினைவுக்கு வந்து விடும்.

## 4

### பணத்தை தொடமாட்டார்

கவிஞர் கணக்கு விவகாரங்களிலே தலையிடமாட்டார். ரூபாயை அவர் வாங்கிக் கொண்டாலும் சரி, எண்ணிப் பார்ப்பதில்லை. அவர் கொடுத்தாலும் சரி அவர் எண்ணுவதில்லை. மன்னர்மன்னனிடமோ அல்லது மனைவியாரிடமோ கூறி, எடுத்துக் கொடுக்கச் சொல்வார்.

பணம் இருப்பதும் தெரியாது; இல்லாததும் கவிஞருக்குத் தெரியாது. குடும்பத்தினரே அதைக் கவனித்துக் கொள்வார்கள்.

பத்து ரூபாயானாலும், நூறு ரூபாயானாலும், ஆயிரம் ரூபாயானாலும் சரி, அவர் கேட்கும் போது கிடைக்க வேண்டும். அப்படி ஒரு சுபாவம்.

கவிஞர் பிரயாணம் செய்யும் போது, அவருடன் யாரேனும் ஒருவர் கூடப்போவது எப்பொழுதும் வழக்கம். தன்னோடு வருபவரிடம் பணப்பையைக் கொடுத்து விடுவார். ஏனென்றால், அவ்வப்போது பையைத் திறந்து, பணத்தை எடுத்துக் கொடுத்து, மீதியை வாங்கும் சிரமத்தை அவர் ஏற்றுக்கொள்ள மாட்டார்.

## 5

## அதென்ன நாளைக்கு?

எந்த ஒரு காரியத்தையும் நாளைக்கு என்று ஒத்திப் போட்டுக்கொண்டு போவது கவிஞருக்கு அறவே பிடிக்காது.

எதை நினைக்கிறாரோ அல்லது சொல்கிறாரோ அதை உடனே நிறைவேற்ற வேண்டும். "பிறகு செய்கிறேன்," "நாளைக்குச் செய்கிறேன்" என்ற வார்த்தைகளை அவர் விரும்ப மாட்டார்.

"அதென்ன நாளைக்கு? இப்பொழுதே செய்யேன்" என்பார். இரவோ, பகலோ, நடந்து போவதோ, காரில் செல்வதோ அவற்றைப்பற்றி எல்லாம் கவிஞருக்குக் கவலை இல்லை. அவர் சொல்லியதை நிறைவேற்ற அப்பொழுதே எழுந்து செல்ல வேண்டும்.

துடிப்பும் ஆர்வமும் கவிஞருக்கு அதிகம்.

## 6

## நீங்கள்......?

புதுச்சேரியில், கவிஞர் வீட்டுக்குப் பலர் வருவார்கள். எல்லோரும் வேறுபாடு இல்லாமல், சொந்த வீட்டைப் போல் கருதி தங்குவார்கள். உணவு கொள்வார்கள். ஆனால், கவிஞர் முகம் சுளிக்கமாட்டார்.

சில சமயம், வந்தவர் யார் என்பதே கவிஞருக்குத் தெரியாது. அடிக்கடி வருபவர்களைத் தெரிந்து கொள்வார். எப்பொழுதோ ஒரு முறை வருபவரை, எப்படி நினைவில் வைத்துக் கொள்வார்?

ஒரு சமயம் ஒருவர் வந்தார். வணக்கம் என்ருர். கவிஞரும் பதிலுக்கு வணக்கம் தெரிவித்தார். ஆனுல், அவர் யார் என்பது மட்டும் அவருக்குத் தெரியவில்லை.

"எங்கே இருந்து வருகிறீர்கள்?" என்று கேட்டார் கவிஞர். ஊரைக்கொண்டு ஆளைத் தெரிந்து கொள்ளலாம் என்பது கவிஞரின் எண்ணம்.

"நேராக பஸ் ஸ்டாண்டிலிருந்து வருகிறேன்" என்ருர் வந்தவர்.

"இப்பொழுது, நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?" என்று கேட்டார் கவிஞர் மறுபடியும். அவர் செய்யும் தொழிலைக்கொண்டு அவரைத் தெரிந்து கொள்ளலாம் என்ற நினைப்பு.

அவரோ, "சும்மாதான் இருந்து கொண்டிருக்கிறேன்" என்ருர்.

கவிஞரின் முயற்சி தோல்வியுறவே, "நீங்கள்......?" என்று கேட்கத் தொடங்கினுர்.

தான் இன்னுர் என்பதை வந்தவர் விவரித்தார்.

"அதுதானே பார்த்தேன்; எனக்குத் தெரியுமே" என்று கூறிவிட்டு, ஏதோ பேசத் தொடங்கினுர்.

இப்படி எத்தனையோ முறை நிகழ்ந்தது உண்டு.

## 7

## பாட்டாலே திருப்பி அடி

புதுவைக் கல்லூரியில் கவிஞர் படித்துக் கொண்டிருந்தார். அங்கே இருவர் கவிஞரின் நண்பர்கள். நண்பர் ஒருவரிடம் மற்றொருவர் இசை பயில விரும்பினார். இசை கற்றுக்கொள்ள தம் நண்பர் வீட்டுக்குச் சென்றார்.

நண்பரும், "ஏன் பள்ளி கொண்டீர் ஐயா!" என்னும் அருணசலக் கவிராயர் இயற்றிய இராம நாடகக் கீர்த்தனையைச் சொல்லிக் கொடுக்கத் தொடங்கினார். தொடர்ந்து சில நாட்களாக அதே பாடலைத்தான் அவர் சொல்லிக் கொண்டிருந்தார்.

இசைப் பாடல் கற்றுக்கொள்ள வந்தவர் துணுக்குற்றார். மறைமுகமாக, தன்னுடைய ஜாதியைக் குறிப்பிட்டு, கிண்டல் செய்வதாக அவர் எண்ணிக் கொண்டார்.

மறுநாள் கவிஞரிடம் வந்து, "என்னங்க, பாட்டுக் கற்றுத்தரச் சொன்னால், "ஏன் பள்ளி கொண்டீர் ஐயா," என்று சொல்லி என்னைக் கிண்டல் செய்கிறார்" என்று கூறி வருத்தப்பட்டார்.

"நாளை போகும்போது அவர் தொடங்கியவுடன், "எட ராமசாமி தூதுவனே!" என்று திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டிரு" என்று ஆலோசனை சொல்லிக் கொடுத்தார் கவிஞர்.

மறுநாள் அவர் தொடங்கியதும், இவர் திருப்பி, "எட ராமசாமி தூதுவனே" என்று கூறத் தொடங்கினார்.

பாடல் பயிற்சி அத்துடன் முடிவடைந்தது.

பாடல் கற்றுக் கொள்ளப் போனவர் 'பள்ளி' ஜாதியைச் சேர்ந்தவர்.

பாடல் கற்றுக் கொடுத்தவரோ 'இடையர்' ஜாதியைச் சேர்ந்தவர்.

இரண்டு பாடல்களுமே "ராம நாடகக் கீர்த்தனைகள்."

அந்த இருவர் ஜாதியையும் கவிஞர் அறிவார். கவிஞரின் குறும்பு கருத்தோடும் நகைச் சுவையோடும் அமைந்தது.

## 8

## நகைச் சுவையிலும் பகுத்தறிவு

கவிஞர் வாழ்க்கையிலே நிரம்ப நகைச் சுவை உண்டு. அந்த நகைச் சுவையிலே பகுத்தறிவு இழையோடும்.

யாராக இருந்தாலும் கவிதை இயற்றும் தகுதியுடையவரோ இல்லாதவரோ எதையாவது பாட்டு என்று எழுதிக் கொண்டு வந்து திருத்திக் கொடுக்கச் சொன்னால் கவிஞர் சிறிதும் வெறுப்பின்றி அவர்களுடைய மனம் கோணாமல் திருத்திக் கொடுத்து விடுவார்.

சில தொணப்பர்களும் பழமைப் பித்தர்களும் எதையேனும் எழுதிக் கொண்டுவந்து காட்டி கவிஞரைத் தொந்தரவு செய்து கொண்டே இருப்பார்கள். அத்தகையோரிடம் கவியரசர் தம்முடைய நகைச்சுவையைப் புகுத்திக் காட்டி விடுவார்.

ஒருவர், "காசியில் இறக்க முத்தி, கயிலையில் பிறக்க முத்தி..." இப்படியாக மூன்று அடிகள் எழுதிக் கொண்டு

வந்து, "கடைசி அடியை எனக்கு முடிக்கத் தெரியவில்லை; அதை முடித்துக் கொடுக்க வேண்டும்" என்று கவிஞரிடம் கேட்டுக் கொண்டார்.

பார்த்தார் கவியரசர். தனக்குள் சிரித்தவாறு, "எனும் புராணக் கூற்றினைக் கொள்வார் உண்டோ?" என்று முடித்துக் கொடுத்து அனுப்பி விட்டார்.

நகைச்சுவையோடு தம் கருத்தைப் புகுத்திவிட்டார்

## 9

## வாழைப் பழத்துக்காக ஒரு பாட்டு

கவிஞருக்குப் பெரியம்மா ஒருவர் இருந்தார். அவர் ஒரு சமயம், தான் வாங்கி வந்த வாழைப் பழச் சீப்பில், கவிஞர், கவிஞரின் மூத்த சகோதரர் ஆகியோருக்கு ஆளுக்கு ஒன்று கொடுத்துவிட்டு, மீதிப் பழங்களை பழங்கல அறையில் ஒளித்து வைத்து, 'அதை எடுத்துத் தின்னும்படி' பெரியபிள்ளைக்கு சைகை காட்டினார்.

எப்பொழுதுமே அவர்களுக்கெல்லாம் மூத்த பிள்ளையிடம் அதிகப் பிரியம். [இளைய பிள்ளை கவிஞர்.] பெரியம்மாவின் வஞ்சனையை கவிஞர் கவனித்து விட்டார். ஆனால், பெரியபிள்ளையோ பெரியம்மாவின் சைகையைப் புரிந்து கொள்ளவில்லை.

பெரியம்மா தன் வேலை முடிந்ததென வேறு வேலையாகச் சென்றதுதான் தாமதம். கவிஞர், பழங்கல அறைக்குள் புகுந்து பழங்களையெல்லாம் தின்று தீர்த்தார். தோல்களை பழங்கள் இருந்த இடத்திலேயே வைத்து விட்டு ஓடியே போய்விட்டார்.

பெரியம்மா, பெரிய பிள்ளையை மறுபடியும் கூப்பிட்டார். அவர் வந்து அறையில் தேடிப் பார்த்ததில் பழத் தோல்கள்தான் கிடைத்தன. "அக்கா, அக்கா, சின்னப்பயல் [கவிஞர்] பழங்களை யெல்லாம் தின்றுவிட்டுத் தோல்களை வைத்திருக்கான், பாரு" என்று கூறி பெரியம்மாவிடம் அழுதார்.

அப்பாவிடம் குற்றம் பதிவு செய்யப்படுவதை அறிந்த கவிஞர், நிகழ்ந்தவற்றைப் பாட்டாக எழுதி, அவரிடம் கொடுத்தார். அவரும் 'சின்னப் பய'வின் நியாயத்தை ஒப்புக் கொண்டார். கவிஞருக்கு அப்பொழுது வயது பதின்மூன்று இருக்கும். அந்தப் பாடல் பின்வருமாறு:

**பழங்கலத்திலே பழங்களைத்தான்**
**பார்த்துத் தேடி பயல்களைத்தான்**
**கிழங்களைத்தான் உதைக்க வேண்டும்**
**கெடு நினைப்பே அதிகமப்பா**
**ஒழுங்குபட வாழைச் சீப்பில்**
**ஒன்று விழுக்காடு தந்தாள்;**
**விழுங்கிடவே அண்ணவுக்கு**
**மீத்துக் கொடுக்க மறைப்பதென்ன?**

## 10

## எனக்கு முன்பே தெரியும்!

கவிஞரின் உருவம் காண்போரைக் கவரக் கூடியது. அவர் வெளியூர்களுக்கு சுற்றுப் பயணம் செல்லும் போது, தெரிந்தவர்கள் நின்று வணக்கம் தெரிவிப்பார்கள். தெரியாதவர்கள் கூர்ந்து கவனிப்பார்கள். கவிஞரை பலருக்குத் தெரியும். கவிஞருக்கோ ஒரு சிலரைத்தான் நினைவு இருக்கும். பல நாட்கள் தொடர்ந்து பழகிக்

கொண்டே இருந்தால்தான் பெயர் நினைவு இருக்கும்; ஆனால், உருவத்தை மறந்து விடுவார். அப்படி ஒரு சுபாவம் கவிஞருக்கு.

'சக்தி' ஆசிரியராக இருந்து பின்னர், 'மஞ்சரி' ஆசிரியராக இருந்த தி. ஜ. ரவும் கவிஞரும் பல ஆண்டுகளுக்கு முன்னரே பழகியவர்கள். இடைக் காலத்தில் தொடர்பும் சந்திப்பும் இல்லை.

கவிஞர் சென்னைக்கு வந்திருக்கிறார் என்பதை அறிந்து, அவரைக் காண தி. ஜ. ர. முல்லைப் பதிப்பகத்துக்கு வந்தார். கவிஞர் அப்பொழுது நின்று கொண்டிருந்தார்; தி. ஜ. ர கவிஞரைக் கண்டார்; கவிஞரும் அவரைப் பார்த்தார். இருவரும் கைகூப்பி வணக்கம் தெரிவித்துக் கொண்டனர். ஆனால், வந்தவர் தி. ஜ. ர என்பது கவிஞருக்குத் தெரியாது. சிறிது விழித்தார் கவிஞர். கவிஞருக்கு இம் மாதிரி மௌனநிலை உண்டாகும் என்பது எனக்குத் தெரியும். மேலும், மௌன நிலை நீடிக்காமல், "இவர்கள் தி. ஜ. ர; இப்பொழுது சக்தி ஆசிரியர்" என்றேன் நான்.

"ஓ! எனக்கு முன்பே தெரியுமே!" என்று சமாளித்துக் கொண்டதோடு அவரைக் கட்டித் தழுவிக் கொண்டார் கவிஞர்.

இருவர் கண்களிலும் பழைய அன்பு பிரகாசித்தது!

## 11

## கவிஞனின் தகுதி

நாங்கள் இயற்றிய நூலுக்கு அணிந்துரை, பாராட்டுரை, சிறப்புரை வேண்டி கவிஞரிடம் பலர் வருவார்கள்.

அவர்கள் முன்னிலையில், அப்பொழுதே கவிதையிலோ அல்லது உரைநடையிலோ முன்னுரை எழுதிக் கொடுத்து விடுவார் கவிஞர்.

கவியரங்கம் என்ற பெயரில் பல்வேறு பொருள்பற்றி பல கவிஞர்கள் கவிதைகள் இயற்றி வந்து அரங்கத்தில் பாடுகிறார்கள்-படிக்கிறார்கள்.

வானொலியிலும் கவியரங்கம் நிகழ்வது உண்டு.

கவிதையின் சிறப்பு, தகுதிபற்றி கவிஞர் ஒருமுறை பேசிக் கொண்டிருக்கையில்,

“வீட்டிலே இருந்து பல நூல்களைப் புரட்டிப் பார்த்துக் கவிதை எழுதிக் கொண்டு வந்து மேடையில் பாடி விடுகின்றனர். கவிஞன் என்றால் ஒரு மண்டபத்தில் இருந்து, எந்தப் பொருள்பற்றியும் அப்பொழுதே கவிதை இயற்ற வேண்டும். அதுவே கவிஞனின் திறமைக்குச் சான்றாகும்” என்றார்.

இதற்கு எத்தனை பேர் முன்வருவார்கள்?

## 12

## விரும்பிப் படிக்கும் காட்சி

பாவேந்தர் நகைச்சுவை நிரம்பியவர். நகைச்சுவையை மிகவும் விரும்புபவர்.

‘திருமுக விலாசம்’ என்னும் நூலைப் பெரிதும் விரும்பிப் படிப்பார்.

அதிலே ஒரு காட்சி:

கோயில் ஆயிரங்கால் மண்டபத்தின் வெளியில் ஒருவன் நின்றுகொண்டு உரத்த குரலில் ஆணையிட்டுக்

கொண்டிருக்கிறுன். அவன் பேசுவதைப் பார்த்தால் உள்ளே பலபேருக்குச் சமையல் நடந்து கொண்டிருப்ப தைப் போலவும் கேட்பவர்களுக்குத் தோன்றும். அருகில் சென்று மண்டபத்தில் நுழைந்து பார்த்தால் ஒன்றும் இராது. "எதற்காக இவ்வாறு செய்தாய்?" எனக் கேட்ட தற்கு, "மக்கள் பட்டினியால் செத்துக் கொண்டிருக் கிறுர்கள். மன்னனே நாடு வளமுடன் இருக்கிறது என்று கூறிக்கொண்டிருக்கிறுன். அதை விளக்கவே இவ்வாறு செய்தேன்" என்றுனும்.

## 13

## வயதின் குற்றம்

பாரதிதாசன் 'குயில்' இதழை சிலகாலம் நடத்தி வந்தார். அப்பொழுது அவருடைய தாக்குதலுக்கு இலக்கானவர் பலர். அதேபோல் புகழுக்கு உரியராஞேர் சிலர்.

ஒரு கவிஞர், "குரல் கெட்ட குயிலே!" என கவிஞ ரைத் தாக்கிப் பாடிவிட்டார். சில நாட்களுக்குப்பின் அந்தக் கவிஞர் என்ன நினைத்தாரோ தெரியவில்லை. ஒரு பாடல் எழுதினுர்:

"பெருங்கவிஞ!
மன்னிப்பாய்
வயதின் குற்றம்!
அறியாமல் வசை பாடித் திரிந்தது உண்டு
அறியாத நாட்களிலே இகழ்ந்தது உண்டு"

இந்த மன்னிப்புப் பாடலைக் கண்ணுற்ற பாவேந்தர், "குறை வயதிலே இருக்கலாம் ஆனுல்,

கவிதையிலே இருக்கக் கூடாது'' என்று அருகில் இருந்தவர்களிடம் கூறினார்.

## 14

## வேலை இல்லாமல் இருக்கிறாய் !

பாவலர் ஒருவர் இசை, நாட்டியம், மலர் வெளியிடுதல் இப்படி எதிலாவது ஈடுபட்டுக் கொண்டிருப்பார். அவருக்கு நிலையான தொழில் எதுவும் இல்லை.

ஒருநாள் பாவலர் கவிஞரைக் காண வந்திருந்தார். ஏதோ பேசிக் கொண்டிருந்தார். பிறகு, "இப்பொழுது, தமிழ் இசைபற்றி ஒரு மலர் தயாரித்துக்கொண்டிருக்கிறேன், தெரியுமா?'' என்றார் பாவலர்.

"ஆகக்கூடி, இப்பொழுது நீ வேலையில்லாமல் இருக்கிறாய் என்பது நன்றாகத் தெரிகிறது. அதுதான் இந்த மலர் வெளியிட ஆரம்பித்திருக்கிறாய்!'' என்றார் கவிஞர்.

பெரும்பாலும் மனதில் தோன்றியதை அப்படியே கூறிவிடுவது கவிஞரின் இயல்பான குணம்.

## 15

## தங்கக் கலசத்தின் மேல்.

கவிஞர் பொழுது போக்குக்காக மாலை வேளையில் வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்து அமைதி காண்பது வழக்கம்.

அப்பொழுது தெருவில் சிறுவர்கள் 'காற்றாடி' விட்டு விளையாடுவார்கள். ஒருநாள் அதைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தார் கவிஞர்.

ஒரு சிறுவனின் காற்றுடிக்கு வால் போதவில்லை. உடனே அந்தச் சிறுவன் தன்னுடைய கோவணத்தைக் கிழித்து, அந்தக் காற்றுடிக்கு வால் கட்டி பறக்க விட்டான்.

காற்றுடி உயரப் பறந்து கொண்டிருக்கையில் அருகில் இருந்த கோவில் கோபுரத்தின் உச்சியில் உள்ள தங்கக் கலசத்தில் அந்தக் கோவணம் சுற்றிக்கொண்டது. உடனே அந்தச் சிறுவன், அருகில் இருந்த தன் தோழர்களிடம், "அதோ, என் கோவணம் தங்கக் கலசத்தின்மேல் சுற்றிக் கொண்டது பாருங்கள்!" என்று பெருமையாகக் கூறினன்.

அதைப் பார்த்த கவிஞர் அதற்கு ஒரு உவமை கூறினர்.

சொந்தமாக நூல்கள் எழுத வகையறியாத சிலர், வேண்டாதவற்றை மொழி பெயர்த்தும், பழமையான நூல்களான தொல்காப்பியம், திருக்குறள், சிலப்பதிகாரம் கம்பராமாயணம் போன்ற பெரிய நூல்களில் "பதிப்பாசிரியர்" என்ற 'முத்திரை' போட்டு வருகிறார்கள் அல்லவா? அதற்குத்தான் "என் கோவணம் தங்கக் கலசத்தின்மேல்!" என்று கூறுகிறார்.

நகைச்சுவையோடு கூடிய உவமை!

## 16

## கவிஞரின் வெறுப்பு

கவிஞரிடம் பலர் வருவார்கள்; பேசுவார்கள். கருத்துள்ளவற்றைக் கவனமாகக் கேட்பார்; பதில் கூறுவார்; சொல்லும் பொருளையும் சொல்லக்கூடியவரையும் கவனிப்பார். சில சமயம் கிண்டலாகப் பதில் அளிப்பார்; சில சமயம்

மௌனமாகவே இருந்து விடுவார்; வேறு சில சமயங்களில் அலுத்துக்கொள்வார்.

பொதுவாக, தொண தொண என்று பேசுபவர்களை யும், உருப்படியாக எதையும் செய்யாதவர்களையும், வயிற்றுப் பிழைப்பைக் கருதி ஏதேனும் செய்பவர்களையும் அறவே வெறுப்பார். அவர்களிடம் கிண்டலாகப் பேசுவார்.

'கலைத்தொண்டர்' ஒருவர் ஒருநாள் கவிஞரைக் காண வந்தார். அவர், "நான் ஒரு பெரிய மாநாடு நடத்தப் போகிறேன்; உங்களுடைய ஒத்துழைப்பு வேண்டும்" என்று கூறி தன்னுடைய வீரதீரப் பிரதாபங்களை அளந்து விட்டார்.

கவிஞர் சாவதானமாகப் பொறுமையோடு கேட்டுக் கொண்டிருந்துவிட்டு, "நீ என்ன செய்தாலும் சரி; இப்பொழுது சரியான தொழில் எதுவும் இல்லாமல் இருக் கிறாய் என்பது மட்டும் தெரிகிறது; அதனால்தான் இந்த மாநாடு எல்லாம்!" என்றார்.

தொண்டருக்கு வாயடைத்து விட்டது. முகத்தில் விளக்கெண்ணெய் வடிவதுபோல் ஆயிற்று. பிறகு ஒருவாறு சமாளித்துக் கொண்டு, "என்ன, என்னை யெல்லாம் கிண்டல் செய்ய ஆரம்பித்துவிட்டீர்கள்" என்றார் அந்தக் கலைத்தொண்டர்.

## 17

## சைவமா? வைணவமா?

பொதுவாக, உணவுப் பழக்கத்தைக் கூறுவதற்குச் சிலர் 'சைவம்' என்பார்கள்.

'சைவம்', 'மரக்கறி உணவு'—இப்படியாகச் சிலர் கூறுவது வழக்கம்.

'மாமிச உணவு', 'புலால் உணவு' என்று கூறுவர் வேறு சிலர்.

கவிஞர் வேறு விதமாகக் கூறுவார்.

கவிஞர் முதல் தடவையாக ஒரு அன்பருடைய வீட்டுக்குச் சென்றார். உணவு தயாரிப்பதற்காக, "ஐயா, நீங்கள் சைவமா?" என்று கேட்டார் அந்த வீட்டு அம்மையார்.

'இல்லை, நான் வைணவம்!'' என்று கூறினார் கவிஞர்.

அம்மையாருக்குப் புரியவில்லை. வியப்படைந்தார்.

சைவத்துக்கு எதிரிடை வைணவம் தானே! மாமிச உணவைக் குறிப்பிட கவிஞர் அம்மாதிரி நகைச்சுவையோடு கூறுவார்.

## 18

## பொறுக்கி எடுத்த மாணிக்கங்கள்

சில ஆண்டுகளுக்கு முன், புதுச்சேரியில் ஒரு நிகழ்ச்சியில் பாவேந்தர் கலந்து கொண்டார். அதில், உள்ளூர் அமைச்சர் ஒருவரும் கலந்து கொண்டார்.

பாவேந்தர் தம் பேச்சின் மத்தியில், "இங்குள்ள அமைச்சர்கள் பொறுக்கி......" என்று கூறிவிட்டு மேசை மீது இருந்த சோடாவை எடுத்துக் குடிக்கத் தொடங்கினார்.

அப்பொழுது அமைச்சர் சங்கடத்தோடு நெளிய, கூட்டத்தில் அமைச்சர் சார்பானவர்கள் சலசலக்க, பாவேந்தர் சோடாவைக் குடித்துவிட்டு, "எடுத்த மாணிக்கங்கள்'' என்று வார்த்தையை முடித்தார்.

அமைச்சர் உள்பட கூட்டத்தினர் கைதட்டி ஆர வாரம் செய்து சிரித்தார்கள்.

"இங்குள்ள அமைச்சர்கள் பொறுக்கி எடுத்த மாணிக் கங்கள்!"

## 19

## வீட்டுக்கு வெள்ளை அடிக்கவா?

சில ஆண்டுகளுக்கு முன், பாவேந்தரும் புலவர் கோவேந்தனும் வேலூரில் ஹோட்டலில் சாப்பிட்டுவிட்டு, வெற்றிலை போடுவதற்காக கடையின் முன் நின்று வெற்றிலைபாக்கு வாங்கினார்கள்.

வெற்றிலைபாக்கோடு இருந்த சுண்ணும்பைப் பார்த்து விட்டு, கடைக்காரரிடம், "ஏம்ப்பா, வீட்டுக்கு வெள்ளை அடிக்கவா சுண்ணும்பு கொடுத்திருக்கிருய்?" என்று கேட் டாராம் பாவேந்தர்.

கடைக்காரருக்கு ஒன்றும் புரியவில்லை.

வெற்றிலைபாக்கைக் காட்டிலும் சுண்ணும்பு மிக அதிகமாயிருந்ததே காரணம்!

## 20

## உமக்கு மேல் பெரியவர் யார்?

சில சமயங்களில், 'எங்கே போகிறேம்' என்பதைக் கூருமலேயே கவிஞர் போய்க் கொண்டிருப்பார். உடன் செல்வோர் அவரைத் தொடர்ந்து செல்ல வேண்டியதே.

ஒரு முறை, சென்னை நகர நீதிமன்ற அலுவலகத்தில் நுழைந்து, அங்கு இருந்த குமாஸ்தாவிடம், ஏதோ விவரம் கேட்டார் கவிஞர். பதில் சொல்லத் தெரியாமல் குமாஸ்தா விழித்தார்.

“இங்கே, உமக்கு மேல் பெரியவர் யார்? அவரிடம் போய் கேட்டுக்கொள்கிறேன்” என்றார் கவிஞர்.

குமாஸ்தா நடுநடுங்கி விட்டார். சற்று தொலைவி லிருந்த புலவர் நாகராஜன் எழுந்து வந்து, கவிஞருக்கு வணக்கம்கூறி, உட்காரச்சொல்லி, கவிஞரின் கேள்விக்கு விளக்கம் கூறி, உபசரித்தார்.

புலவர் நாகராஜன் கவிஞரின் ரசிகர் என்பதைக் கூறவும் வேண்டுமோ?

## 21

## சந்தேகமா?

பல ஆண்டுகளுக்கு முன் மதுரையின் கடைத் தெரு வில் கவிஞர், மன்னர் மன்னன், நான் மூவரும் போய்க் கொண்டிருந்தோம்.

குழந்தையைப் போல் ஒவ்வொரு கடையாகப் பார்த்துக் கொண்டு நடு வீதியில் கவிஞர் நடந்து கொண்டிருந்தார். “திண்டுக்கல் பூட்டு இங்கு விற்கக் கூடும்” என ஒரு பெயர்ப் பலகை. மற்றும் பல கடைகளிலும் இப்படியே “விற்கக் கூடும்” என்றே எழுதியிருந்தது.

“அதென்னப்பா, விற்கக் கூடும்? விற்காமலும் இருப் பார்களா? சந்தேகமாக எழுதியிருக்கிறார்களே” என வியப் போடு கேட்டார் கவிஞர்.

"இந்த ஊரில் அப்படித்தான் எழுதுகிறார்கள்!" என்று பதில் அளித்தேன் நான்.

## 22

### சூடான சோடா!

ஒரு சமயம் கவிஞரும் மருமகன் தண்டபாணியும் சென்னையிலிருந்து புதுச்சேரிக்குப் போய்க் கொண்டிருக்கையில் செங்கல்பட்டில் ரயில்கேட் மூடியிருந்ததால் கார் நிற்கவேண்டியதாயிற்று.

சோடா குடிப்பதற்காக அருகிலிருந்த கடைக்குச் சென்றார் கவிஞர். வெயில் நேரமானதால், சோடா மிகவும் சூடாயிருந்தது. சோடாவைக் குடித்த கவிஞர், சோர்வுற்றிருந்த தண்டபாணியிடம் "நீயும் ஒரு சோடா குடி மாப்பிள்ளை, உன் உடம்புக்கு நல்லது" என்று சொல்லிக் கொண்டு, சாலைப்பக்கம் திரும்பி நின்று, "இங்கே சூடான சோடா கிடைக்கும்" என்று பலமுறை கூவினார். கடைக்காரரோ வெறிக்க வெறிக்கப் பார்த்தார்.

## 23

### என்ன காரணம்?

பன்னிரண்டு ஆண்டுக்கு ஒரு முறை மாசிமகம் விழாவை 'மாமாங்கம்' என்று கூறுவார்கள். கும்பகோணத்தில் இந்த விழா கோலாகலமாக நடைபெறும். லட்சக்கணக்கான மக்கள் கூடி, மாமாங்கக் குளத்தில் நீராடி வழிபடுவார்கள்.

1944-ல் மாமாங்கவிழா. முன்னாள் காங்கிரஸ் அமைச்சர் திருச்சி டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன் மாமாங்க விழாவைக்

கண்டித்து வெளியிட்ட அறிக்கை பத்திரிகையில் காணப் பட்டது.

'டாக்டர் ராஜன் ஆரோக்கியத்துக்கு ஆகாது என்று கண்டிக்கிறாரா? அல்லது பகுத்தறிவுக் கொள்கை காரண மாகக் கூறுகிறாரா?' என நான் சிந்தித்தேன். கவிஞரிடம் இந்த விவரத்தைக் கூறினேன்.

"மகாமக விழா சைவசமயத் தொடர்புடையது; டாக்டர் ராஜன் வைஷ்ணவர். அதனால், அதைக் கண்டித்து எதிர்ப்புத் தெரிவிக்கிறார்" என்றார் கவிஞர்.

நான் குழம்பிய இரண்டு காரணமும் அல்லாமல், மூன்றாவதான ஒரு காரணத்தைக் கூறிவிட்டார் கவிஞர்.

## 24

## ஐஸ் கிடைக்கவில்லையாம் !

புதுச்சேரியில் பெரியசாமி என்பவர் கவிஞர் வீட்டுக்கு தினமும் வருவார். அன்பாகப் பழகுவார். கவிஞர் எங்கே சென்றாலும் பெரியசாமியும் கூடவே செல்வார். பெரியசாமி கவிஞரைப் போலவே பேசுவார். மறைவிலிருந்து பெரிய சாமி பேசினால், கவிஞர் பேசுவது போலவே இருக்கும்.

ஒரு சமயம் கவிஞர் காரைக்காலுக்குச் சென்றார். பெரியசாமியும் உடன் சென்றார். அங்கே இருவரும் ஒரு அறையில் தங்கினார்கள். இரவு நேரம். ஐஸ் வேண்டும் என்று கவிஞர் விரும்பினார். உடனே பெரியசாமியிடம் ஐஸ் வாங்கிவரும்படி கூறினார். பெரியசாமியோ பல இடங் களுக்குப் போனார். ஆனால், ஐஸ் கிடைக்கவில்லை. திரும்பி

வந்து, ஐஸ் கிடைக்கவில்லை என்பதை சோர்வாகக்கூறினார். கவிஞருக்குக் கோபம் அதிகம். தான் கேட்டது கிடைக்கவில்லை என்றால் கவிஞருக்கு உடனே கோபம் வந்து விடும். சிறிது நேரம் கழித்து அந்தக் கோபம் நகைச்சுவையாகவும் மாறிவிடும். "இதோ பாருங்கள்! இவர் சொல்கிறார்; காரைக்கால் முழுதும் ஐஸ் கிடைக்கவில்லையாம்" என்று அருகில் இருந்தவர்களிடம் கூறத்தொடங்கினார். பெரிய சாமிக்கோ வெட்கமாகிவிட்டது.

## 25

## புது மாணவர் யார்?

இளமையிலேயே புலமை வளம் பெற்றவர் கவிஞர் பாரதிதாசன்.

புதுவை அரசு கல்லூரி தமிழ் ஆசிரியர் தேர்வில் தம் பதினெட்டாம் வயதிலேயே புதுவையில் முதன்மையாகத் தேறி, தம்முடைய புலமையை வெளிப்படுத்தினார்.

கவிஞருக்கு அரசு உடனே ஆசிரியப்பதவி அளித்து, முதன் முதலில் காரைக்காலுக்கு அடுத்துள்ள நெரவை என்ற கிராமத்துப் பள்ளியில் அமர்த்தினார்கள்.

முதல் நாள் கவிஞர் பள்ளிக்குச் செல்கிறார். அந்தப் பள்ளியின் மாணவர்கள், கவிக் காளையைக் கண்டதும் "யார் இந்தப் புது மாணவன்?" என்று ஒருவருக்கொருவர் வியப்போடு விசாரித்தவாறு இருந்தனர்.

பள்ளியில் வகுப்பு ஆரம்பமாயிற்று. பள்ளித் தலைமை ஆசிரியர் கவிஞரை வகுப்புக்கு அழைத்து வந்து, "இவர்தான் உங்கள் முதல் வகுப்பு ஆசிரியர்!" என்று அறிமுகப்படுத்தினார்.

அவ்வளவுதான்; மாணவர்களின் நாணத்தைப் பார்க்க முடியவில்லை ஏன்? ஆசிரியருக்கு வயது பதினெட்டு! மாணவர்களுக்கோ பத்தொன்பது, இருபதுக்கு மேல் இருந்தது.

## 26

## இவங்களுக்கு ரொம்பத் தெரியும்

கவிஞருக்கு, வீட்டில் எந்தப் பொறுப்பும் இல்லை. எல்லாவற்றையும் கவிஞர் மனைவியாரும் மன்னர்மன்னனும் கவனித்துக் கொள்வார்கள்.

சில சமயங்களில் குழந்தையைப்போல, எதையேனும் செய்ய முற்படுவார். வேண்டாம் என்றால் கேட்கவே மாட்டார். அப்படி ஒரு இயல்பு கவிஞரிடம்.

ஒரு சமயம் கொதிக்கும் எண்ணெயைக் கண்ணாடிப் புட்டியில் ஊற்ற முற்பட்டார் கவிஞர். "புட்டி உடைந்து விடும்" என்று மனைவியாரும் மற்றுமுள்ளோரும் கூறினார்கள்.

"இவங்களுக்கு ரொம்பத் தெரியும்" என்று சொல்லிக் கொண்டே கொதிக்கும் எண்ணெயை புட்டியில் ஊற்றி விட்டார். உடனே புட்டி உடைந்தது; எண்ணெயும் சிந்திவிட்டது. அதைப் பார்த்த கவிஞர் "ஆமாம், ஒடஞ்சி போச்சு" என்று கூறிவிட்டு பேசாமல் திண்ணையில் போய் உட்கார்ந்து விட்டார்.

## 27

## அவருக்கு நல்லாத் தெரியும்

புதுவையில் கவிஞர் வாங்கிய வீட்டை, வசதியாகச் செய்ய எண்ணி, அந்த வேலையை தாமே முன்னின்று கவனிக்கத் தொடங்கினர் கவிஞர்.

கவிஞரின் உள்ளத்தை அறிந்த உயிர் நண்பர் குயில் சிவாவும் அருகில் இருந்தார்.

கதவுக்குத் தாழ்ப்பாள் பொருத்தும் வேலையில் கவிஞர் ஈடுபட்டார். ஆணியோ மரத்தில் இறங்கவில்லை. எவ்வளவோ முயன்றார் கவிஞர்.

குயில் சிவா உதவுவதற்கு முன்வந்தார். "எப்படியோ போய்த் தொலை" என்று கூறிவிட்டுப் போய்விட்டார் கவிஞர்.

சிறிது நேரத்தில் சிவா தாழ்ப்பாளை பொருத்திவிட்டார்.

"சிவா! இதெல்லாம் எனக்கு வரலை; தமிழ் தவிர வேறு எதுவும் தெரியலே எனக்கு!" என்றார் கவிஞர் அவரைப் பார்த்து.

பிறகு, "பாரப்பா, சிவா ரொம்பக் கெட்டிக்காரர். பூட்டுத் திறப்பது, தாழ்ப்பாள் பொருத்துவது இதெல்லாம் இவருக்கு நல்லாத் தெரியும்" என்றார் கவிஞர்.

சிவா சிரித்தார்.

## 28

## பாங்கியில்ஏன் போடவேண்டும்?

எவ்வளவு ரூபாய்களானாலும் சரி, அதைப் பாங்கியில் போட்டு வைத்து, தேவையான போது எடுத்துக் கொள்ளும் வழக்கத்தை கவிஞர் விரும்புவதே இல்லை.

"அதென்ன? அங்கே கொண்டு போய்க் கொடுத்து, அப்புறம், அவனிடம் கையெழுத்துப போட்டுக் கொடுத்து, அவன் தயவுக்குக் காத்து நிற்க வேண்டும்?" என்று வெறுப்போடு கூறுவார்.

எத்தனை ஆயிரமானாலும் அவற்றை அப்படியே பெட்டியில் வைப்பதைத்தான் விரும்புவார். பெட்டியைப் பூட்டும் சிரமம் கூட எடுத்துக் கொள்ள மாட்டார். அப்படி ஒரு இயல்பு கவிஞரிடம்.

## 29

## திருமணத்துக்கு வர வேண்டாம்

கவிஞரின் மூத்த மகள் சரசுவதிக்குத் திருமணம் நிச்சயிக்கப் பெற்றது. அழைப்பு அச்சிடப் பெற்று எல்லோருக்கும் அனுப்பப் பெற்றது.

கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன் அவர்களுக்கு திருமண அழைப்போடு ஒரு கடிதம் எழுதி அனுப்பினார் கவிஞர்.

"தங்களுக்கு ஓய்வு இருக்கிறது என்று திருமண விழாவுக்கு வந்து விட வேண்டாம்" எனக் குறிப்பிட்டிருந்தார் கவிஞர்.

திருமண விழாவுக்கு அனைவரையும் 'வர வேண்டும்' என்று அழைப்பதுதான் வழக்கம். கவிஞரோ வர வேண்டாம் என்கிறாரே என்று எண்ணி வியப்படைந்தேன். கவிஞரிடமே "ஏன் அப்படி எழுதினீர்கள்?" என்று கேட்டேன்.

"திருமணம் நடைபெறுவது கிராமம் [சிற்றூர்]. என்.எஸ்.கே. படப்பிடிப்பு இல்லாமல் இருந்தால், திருமண விழாவுக்கு வந்து விடுவார்; அங்கே பெருங்கூட்டம் கூடி விடும். சமாளிக்க இயலாது; அதனால் அவ்வாறு வர வேண்டாம் என எழுதினேன்" என்றார் கவிஞர்.

## முழுத் தொகையையும் பெற்றுக் கொள்ளுங்கள்

கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன் 'கிந்தனார்' கதையை நடத்தச் செய்து, அதன் மூலம் நிதி திரட்டத் தீர்மானித்தார் ஒரு பள்ளிக்கூடத்தின் நிர்வாகி.

கவிஞரிடம் அவர் வந்து விவரத்தைக் கூறி, கலைவாணர் வீட்டுக்கு அழைத்தார். கவிஞரைக் கூட்டிக் கொண்டு சென்றால், கலைவாணர் தொகையைக் குறைத்துக் கொள்வார் என்பது நிர்வாகியின் கருத்து.

இருவரும் கலைவாணர் வீட்டுக்குச் சென்றார்கள். கவிஞரைக் கண்டதும் மிக உற்சாகத்தோடு வரவேற்று உபசரித்தார் கலைவாணர்.

அதன்பின், கூடவந்தவரை அறிமுகப்படுத்தி, நிதி உதவிக்காக கிந்தனார் நாடகம் நடத்தித் தருமாறு கேட்டுக் கொண்டு, "உங்களுக்கு நாடகத்துக்காக எவ்வளவு தொகையோ, அதை அப்படியே பெற்றுக் கொள்ளுங்கள்" என்று கூறினார் கவிஞர். கலைவாணரும் சம்மதித்து, ஒரு தேதி குறிப்பிட்டார்.

"உங்களைக் கூட்டிக் கொண்டு போனதற்குக் காரணம், கலைவாணர் தொகையைக் குறைவாக வாங்கிக் கொள்வார் என்பதற்காகத்தானே! நீங்கள் முழுத்தொகையையும் வாங்கிக் கொள்ளுங்கள் என்று கூறிவிட்டீர்களே" என்று கேட்டேன் கவிஞரிடம்.

"அப்படி அல்ல; நாம் அப்படிச் சொல்லி விட்டால், அவருக்குத் தெரியும். அந்தத் தொகையை அப்படியே நிதிக்குத் தந்துவிடும் இயல்புடையவர். அல்லது போக்கு

வரத்துச் செலவுக்கு மட்டும் ஏதாவது எடுத்துக் கொண்டு மீதியைச் நிதிக்குத் தந்துவிடுவார். நிதி உதவி என்றால் அப்படிச் செய்யக் கூடிய தாராளத் தன்மையுடையவர்'' என்று கூறினார் கவிஞர்.

## 31

### சீக்கிரம் புரிந்து கொள்!

செட்டிநாட்டுப் பகுதியில் கவிஞர் செல்லும்போதெல்லாம் கானாடுகாத்தான் வைசு மஞ்சுளாபாய் இல்லத்தில் தங்குவது வழக்கம். நண்பர்களும் அன்பர்களும் அங்கே கூடி கலந்து உரையாடுவது வழக்கம்.

அரசியல், இலக்கியம், சமூகம் எல்லாவற்றையும் பற்றி பேசக்கூடியவர் கவிஞர்.

கவிஞர் கூறிய கருத்தை அருகில் இருந்த ஒரு அன்பரால் புரிந்துகொள்ள இயலாமல் திருதிரு வென விழித்தார். "உம், மெல்லு, கடி, ஜீரணி'' என்றார் கவிஞர். அன்பரோ மேலும் குழம்பிப் போனார்.

கருத்தை சிந்தித்துப் புரிந்து கொள்ளும்படி வைசு அவர்கள் விளக்கிக் கூறிய பின்னரே, அதைத்தான் கவிஞர் அவ்வாறு கூறினார் என்பதை அங்கிருந்தோர் புரிந்து கொண்டனர்.

## 32

### உனக்குச் சகோதரிகள் இருக்கிறார்களா?

கடை வீதியில் போய்க் கொண்டிருக்கும்போது, எதையேனும் ஒரு பொருளைப் பார்த்து விட்டால், உடனே அதை வாங்கிக்கொண்டு, அதற்குப் பணம் கொடுக்கும் படி கூறிவிடுவார் கூடவருவோரிடம்.

எங்கே போகிறார், என்ன பொருளை வாங்குகிறார், என்பதெல்லாம் கூடச் செல்வோருக்குத் தெரியாது. கவிஞரின் போக்கு அப்படி!

ஒரு முறை வழியில் போய்க் கொண்டிருக்கையில் ஒரு துணிக் கடையில் நுழைந்தார் கவிஞர். பட்டுப் புடவைகளைப் பார்க்க விரும்பினார்.

கடை விற்பனையாளரோ மிக மெல்லிய துணிகளை [உடுத்திக் கொண்டால் உடல் உறுப்புகள் முழுவதும் தெரியும்] எடுத்து விரித்துக் காண்பித்தார்.

கவிஞருக்கு வந்த கோபத்தை கட்டுப் படுத்திக் கொண்டு, "உனக்குச் சகோதரிகள் இருக்கிறார்களா?" எனக் கேட்டு விட்டு கடையிலிருந்து புறப்பட்டு விட்டார்.

கடைக்காரர் ஒன்றும் புரியாமல் திகைத்தார்.

நானும் மன்னர் மன்னனும் புரிந்து கொண்டோம்.

## 33

## அதிகாரி யார்?

டிப்டாப்பாக ஒருவர் உடையணிந்திருந்தார்; கவிஞரிடம் வந்து சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தார். அப்பொழுது அங்கிருந்தோர் அவர் ஒரு அதிகாரி என நினைத்தார்கள். அவர் விடைபெற்றுச் சென்ற பிறகு, "அவர் யார்?" எனக் கேட்டனர்.

"அரி நமோத்துசிந்தம்" என்றார் கவிஞர்.

'தொடக்கப்பள்ளி ஆசிரியர்' என்பதை அப்படிக் கூறினார். எல்லோருக்கும் சிரிப்புத் தாங்க முடியவில்லை.

## 34

## இசையா? பொருளா?

இசைவாணர்கள் பாடும்பொழுது, ராகத்துக்காக சொற்களைப் பிரித்து, பொருளைக் கொலை செய்து விடுகிறார்கள். 'பொருள் முக்கியமா? இசை முக்கியமா?' என கவிஞர் அடிக்கடி கூறுவது உண்டு.

'எங்கோ மணம் வீசுது' என்ற வரியை ஒரு இசை வாணர் 'எங் கோமணம் வீசுது' என்று பாடினாராம். பொருள் எப்படி வேறுபடுகிறது? கவிஞர் இதைச் சொல்லி சிரிப்பார்.

## 35

## கூட்டத்திலே ஒருவன்...

"கூட்டத்திலே ஒருவன் பித்தா பேயா எனத் திட்ட" என்ற வரியை, "கூட்டத்திலே ஒருவன் பி...... கூட்டத் திலே ஒருவன் பி......" என்று நீட்டி முழக்கி,"த்தா பேயா எனத் திட்ட" என்பதாகப் பிரித்துப் பாடினாராம். இப்படி யாகச் சொற்களைப் பிரித்துப் பிரித்துப் பாடி பொருளைக் கொலை செய்கிறார்கள் என கவிஞர் மிகவும் வருந்துவது உண்டு.

## 36

## பாடுவதே உம் பொறுப்பு!

1962 டிசம்பர் 31-ல் எழுத்தாளர் மாநாடு சென்னை மெமோரியல் மண்டபத்தில் நடைபெற்றது.

கவிஞர் பாரதிதாசன் தலைமையில் கவியரங்கம் தொடங்கியது. பொருள்: "எல்லைப் போர்" பற்றியது.

ஒரு கவிஞர் தான் எழுதிக்கொண்டு வந்திருந்த கவிதையைப் படிக்கத் தொடங்கியபோது, ஒரு வரியை மூன்று முறை பாடி, அதற்கு நயங்களும் உரைக்கத் தொடங்கினர்.

பாரதிதாசனுக்கு எரிச்சல் உண்டாயிற்று.

பாடிக் கொண்டிருந்த கவிஞரை நோக்கி, "பாட்டைப் பாடவேண்டியதுதான் உம்முடைய பொறுப்பு. திரும்பத் திரும்பப் பாடி பொருள் விரிப்பது பொருளற்றது. பொருளை மக்கள் தான் புரிந்து கொள்ளவேண்டும்" என்று கூறினர்.

கூட்டத்தில் கைதட்டல் உண்டாயிற்று.

பாடிய கவிஞர் தலை கவிழ்ந்தார்.

'கவியரங்கம்' என்ற பெயரில் இன்றுவரை இம்மாதிரி 'அறுவை' தொடர்ந்து வேதனை அளித்துக்கொண்டு தானிருக்கிறது. வானொலியும்கூட இதற்கு விலக்கு அல்ல!

## 37

## சௌக்கியமா இருக்கேளா?

பத்தாவது எழுத்தாளர் மாநாடு 1962 டிசம்பர் 31-ல் சென்னையில் நடைபெற்றது. மாநாட்டின் திறப்பாளர் ராஜாஜி. கவிஞர் பாரதிதாசனும் மாநாட்டுக்கு வந்திருந்தார்.

மண்டபத்தின் மேடைக்கு ராஜாஜி வந்தார். எல்லோரும் அவருக்கு எழுந்து மரியாதை செலுத்தினர்கள்.

அங்கே இருந்த கவிஞரைப் பார்த்து, "சௌக்கியமாக இருக்கேளா?" என்று கேட்டார் ராஜாஜி.

"இப்போதைக்கு சாகமாட்டேன்" என பதில் வந்தது கவிஞரிடமிருந்து.

இருவருக்குமே ஒருவருக்கொருவர் பிடிக்காது. கொள்கை வேறுபாடுகள். சம்பிரதாயத்துக்காக ராஜாஜி கேட்டுவைத்தார். கவிஞரோ தன் உள்ளக் குமுறலைக் காண்பித்து விட்டார்.

## 38

## தூக்கக் கலக்கம்

சென்னையிலிருந்து கவிஞரும் வில்லியனூர் விவசாயி ஒருவரும் இரவு ரயிலில் திருச்சிக்குப் பிரயாணமானார்கள்.

வண்டி விழுப்புரம் வந்து நின்றது! கவிஞருக்கு அசதி, தூக்கக் கலக்கம். "இறங்கு, இறங்கு" என்று கூறி, கவிஞர் ரயிலிலிருந்து இறங்கிவிட்டார். வில்லியனூர்க் காரரும் பெட்டியைத் தூக்கிக் கொண்டு இறங்கிவிட்டார்.

கவிஞருக்கு தூக்கம் தெளிந்தது. சுற்று முற்றும் பார்த்துக் கொண்டு நடந்தார். ரயில் புறப்பட்டு விட்டது!

"இது விழுப்புரமுங்க!" என்றார் வில்லியனூர்க்காரர். "இதை ஏன் அப்பொழுதே சொல்லலை?" என கடிந்து கொண்டார் கவிஞர்.

விழுப்புரத்தில் ஏதோ அலுவலை முன்னிட்டு கவிஞர் இறங்குகிறார் என்று கருதிவிட்டார் வில்லியனூர்க்காரர்.

பிறகு, அடுத்த ரயிலில் ஏறி திருச்சிக்குச் சென்றார்கள்.

## 39

### கூட்டிவரச் சொன்னது எதற்கு?

வீட்டில் இருக்கும் போது கவிஞர் திடீரென ஏதே னும் வேலையில் ஈடுபட்டு விடுவார். மனைவியார் வேண்டாம் என்று கூறியபோதிலும் விடமாட்டார். அவர் விருப்பம் போல் ஏதாவது செய்வார். பார்த்த வேலையை முடிக்கவும் மாட்டார்; அப்படியே போட்டு விடுவார். குழந்தை மனம் உடையவர்.

ஒரு நாள் ஏதோ செய்ய முற்பட்டார் கவிஞர். [என்ன வென்று எனக்கு நினைவு இல்லை.] அப்படிச் செய்யக்கூடாது என குடும்பத்தினர் கூறினர்.

சிவாவை கூட்டி வரும்படி ஆள் அனுப்பினார் கவிஞர். சிவா வந்து பார்த்துவிட்டு, "ஆமாம், சுப்பு. அவர்கள் சொல்வது சரிதான்; அப்படிச் செய்யக் கூடாது" என்றார்.

"இதைச் சொல்வதற்காகத்தான், உன்னை கூட்டிவரச் சொன்னேனா? போ, போ," என்று கடிந்து கொண்டார் கவிஞர்.

சிவா, "நீ எப்போதும் இப்படித்தான்" என்று கூறிச் சிரித்தார்.

## 40

### அதில் என்ன மாற்றம்?

கவிஞரின் 'பாண்டியன் பரிசு' வெளிவந்திருந்த சமயம். புதுமைப்பித்தன் அந்தக் காவியத்தைப் படித்துவிட்டு சிறு விமர்சனம் எழுதினார்.

"பாரதிதாசனுக்கும் ஏனைய கவிஞரைப் போல் முடிவில் தர்மந்தான் வெற்றி பெறுகிறது. உலகின் தர்மா தர்மப்

பிரச்சனைகளில் அப்படித்தானா?'' என்று குறிப்பிட்டிருந்தார்.

புதுமைப்பித்தன் எழுதியிருப்பதைக் கவிஞரிடம் காண்பித்துக் கேட்டேன். அதைப் பார்த்த கவிஞர், "அதில் என்ன மாறுதல்? நன்மை செய்தவன் நன்மை பெறுவதும், தீமை செய்தவன் தீமை அடைவதும் இயல்புதானே" என்றார்.

## 41

## தோல்விக்கு ஆறுதல்

மன்னர் மன்னன் பள்ளியில் படித்துக் கொண்டிருந்தான். பிரெஞ்சு மொழியும் ஒரு பாடம். 1944ல், [எந்த வகுப்பு என்பது நினைவு இல்லை] தேர்வில் தோல்வியுற்று விட்டான். அதை நினைத்து வருந்தி, அழுது கொண்டிருந்தான்; சாப்பிடவும் இல்லை.

"ஏன் அழுதுகொண்டிருக்கிறான்?" என்று கேட்டேன் கவிஞரிடம்.

தேர்வுபற்றிக் குறிப்பிட்டு, "எனக்கு வருத்தமும் இல்லை; கோபமும் இல்லை. அந்தப் பாடம் மிகவும் கடினமானது; ஓர் ஆண்டு தங்கிப் படிப்பது மிகவும் நல்லதே'' என ஆறுதலாகக் கூறினார் கவிஞர்.

பொதுவாக, கோபித்து, வசைமொழி கூறும் பெற்றோர்களைக் காணும் நமக்கு கவிஞரின் போக்கு வியப்பாகத் தான் இருக்கும்.

## 42

## பார்ப்பதால் வாங்கலாம்

ஒரு கடைக்குள் வாடிக்கையாளர் நுழையும் போதே, "என்ன வேண்டும்? என்ன வேண்டும்?" என்று கேட்டு, சில கடைக்காரர்கள் வழி மறிப்பார்கள்.

கவிஞரும் நானும் கடைவீதியில் போய்க் கொண்டிருந்தோம். அப்பொழுது ஒரு ஜவுளிக்கடைக்குள் கவிஞர் நுழைந்தார். கடை விற்பனையாளர் எதிர்ப்பட்டு, 'என்ன வேண்டும்?' என்று கேட்டார்.

"வேண்டும் என்று வரவில்லை; பார்ப்பதனால் ஒரு பொருளை வாங்கலாம் அல்லவா?" என்று கூறிவிட்டு கவிஞர் திரும்பிவிட்டார்.

அதைக் கேட்ட விற்பனையாளர் திரு திரு வென்று விழித்தார். அவருக்கு எப்படித் தெரியும் கவிஞரின் கருத்து!

## 43

## தம்பி எங்கே?

கவிஞர் வீட்டில், கவிஞரின் மூத்த மகள் சரசுவதிதான் பெரும்பாலும் குடும்பத்தைக் கவனித்து வந்தார்.

சரசுவதிக்குத் திருமணம் ஆகி கணவன் வீட்டுக்குச் சென்ற பின்னர், மன்னர் மன்னன்தான் குடும்பத்தைப் பொறுப்பாகக் கவனித்து வந்தார்.

கவிஞருக்கு குடும்பத்தின் கவலையோ, பொறுப்போ எதுவுமே கிடையாது.

எதற்குமே 'தம்பி' என்றுதான் கூப்பிடுவார். 'தம்பி' யைத்தான் கேட்பார் கவிஞர்.

மன்னர் மன்னனுக்கு திருமணம் ஆயிற்று; சிலகாலத் துக்குப் பிறகு, குடும்பத்தில் மனவேறுபாடு காரணமாக, மனைவியை அழைத்துக்கொண்டு வெளியேறி, வேறு வீட்டில் குடித்தனம் நடத்த நேரிட்டது.

கவிஞர் வீட்டுக்கு வந்த அன்பர் சுற்றுமுற்றும் பார்த் தார். தம்பியைக் காணவில்லை. "தம்பி எங்கே?" என்று கவிஞரிடம் கேட்டார் அன்பர்.

"அவர் இப்பொழுது சுயேச்சையாக இயங்குகிறார்!" என்று சுருக்கமாக, அழகாகக் கூறினார் கவிஞர்.

மற்றவர்களுக்கும் கவிஞருக்கும் உள்ள வேறுபாடு இதுதான்! கவிஞர் மிக சுருக்கமாக அழகாகக் கூறிவிட் டார். மற்றவர்களானால், ஏதேதோ கூறி விவரிப்பார்கள். கேட்பதற்கு சங்கடமாகவும் இருக்கும்.

## 44

### தலை வலியா ?

தினப் பத்திரிகை படித்துக் கொண்டிருந்தார் கவிஞர். அதில், "உங்களுக்குத் தலைவலியா?" என்னும் தலைப்பில் ஒரு விளம்பரத்தைப் பார்த்த கவிஞர், "ஆமப்பா!" என்று கூறிவிட்டு, "இதைப் படிப்பதனால் தலைவலிதான் வரும்!" என்று தனக்குள் கூறிக்கொண்டார்.

## 45

### உங்களுக்கு குஷ்டமா?

மற்ெறாரு நாள், கவிஞர் தினப்பத்திரிகை படித்துக் கொண்டிருந்தார். அப்பொழுது, "உங்களுக்கு குஷ்டமா?" என்ற விளம்பரத்தைப் படித்து விட்டு, "இல்லேப்பா!" என்று தானாகவே கூறிக்கொண்டார். கவிஞர் எதிலும் நகைச்சுவை காண்பவர்.

## 46

### அன்று ஏன் ?

திருமணஅழைப்பு இதழ் ஒன்று கவிஞருக்கு தபாலில் வந்திருந்ததை எடுத்துப் பார்த்தார். அதில் 14-9-1944 திங்கட்கிழமை அன்று...எனக் குறிப்பிடப்பட்டிருப்பதைப் பார்த்து விட்டு, " 'அன்று' என ஏன் போடவேண்டும்? 'அன்று' என்றால் 'அல்ல' என்ற ஒரு பொருளும் உண்டு. இரு பொருள் தரக்கூடிய சொற்களை உபயோகிக்கக் கூடாது" என்று கூறினார் கவிஞர்.

பெரும்பாலான அழைப்பு இதழ்களில் தேதி, கிழமையைத் தொடர்ந்து 'அன்று' என்ற சொல்லும் காணப்படும்.

இன்றும் கூட 'அன்று' என்ற சொல்லை அழைப்பு இதழ்களில் பார்த்தவுடனே கவிஞர் கூறியது எனக்கு நினைவுக்கு வந்துவிடும்.

## 47

### பலமொழிக் குழப்பம்

பல மொழிகள் கற்ற புலவர் ஒருவர். அவருக்குப் 'பன்மொழிப் புலவர்' என்ற பட்டம் வேறு. ஆனால், அந்தப் பன்மொழிப்புலவரின் பேச்சிலோ, எழுத்திலோ தெளிவு

இருக்காது. அதற்கு மாருகக் குழப்பமே மிகுதியாக இருக்கும்.

கவிஞர் எதிலும் தெளிவுடையவர்; சுருக்கமாக, தெளிவாக, அழகாகக் கூறக் கூடியவர். குழப்பமான சொற்களை அறவே வெறுக்கக் கூடியவர்.

ஒரு சமயம் பலருடன் பேசிக் கொண்டிருக்கையில், "அதிகமான மொழிகளைக் கற்ருலே குழப்பம்தான் உண்டாகும். அதற்கு நம்முடைய பன்மொழிப் புலவரே சான்று" என்று குறிப்பிட்டார் கவிஞர்.

**"பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற**
**சிலசொல்லல் தேற்ரு தவர்"**

என்னும் குறளை அடிக்கடி கூறுவார் கவிஞர்.

## 48

## செங்கல்லை வைத்து அடுக்குவதா ?

பெரும் புலவர் ஒருவர், "தொல்லைத் தமிழ் வளர்க்கும் முல்லை முத்தையா..." என்று தொடங்கி, ஒரு வெண்பா எழுதியிருந்தார். [வெண்பா முழுவதும் நினைவு இல்லை; 1945-ல் அந்தப் புலவர் அனுப்பியிருந்தார்]

கவிஞரிடம் அந்த வெண்பாவைக் காண்பித்தேன்.

"புலவர்கள் பாட்டு எழுதினுல் கொத்தனுர் செங்கல்லை வைத்து அடுக்குவது போலிருக்கும்; இதனுல்தான், புலவர்கள் கவிதை எழுதக்கூடாது என்று சொல்லுகிறேன்; மேலும், ஒரு சொல் இரு பொருள்பட எழுதக்கூடாது" என்ருர் கவிஞர்.

'தொல்லை' என்பது பழமையையும் குறிக்கும்; 'தொந்தரவு' என்பதனையும் குறிக்கும்.

## 49

## சிவபதவிக்கு வருந்தலாமா ?

நாட்டுக்கோட்டைச் செட்டியார்களிடையே, யாரேனும் இறந்து விட்டால், உறவினர்களுக்கும் நண்பர்களுக்கும் கடிதமூலம் அந்தச் செய்தியை தெரிவிக்கும் போது, 'இறந்து விட்டார்கள்', 'காலமானார்கள்' என்று குறிப்பிடாமல், 'சிவலோகபதவி' அடைந்து விட்டார்கள் எனக் குறிப்பிடுவது வழக்கம்.

ஒரு சமயம் கவிஞரும் மற்றும் சிலரும் பேசிக் கொண்டிருக்கையில், செட்டியார் நண்பர் ஒருவருக்கு, "...சிவலோகபதவி அடைந்து விட்டார்கள்" என்று தெரிவிக்கப்பட்டிருந்த கடிதம் ஒன்று வந்திருந்தது. அதைப் பார்த்ததும் அவர் வருத்தத்தோடிருந்தார்.

வந்திருந்த கடிதத்தை வாங்கிப் பார்த்து விட்டு, "சிவலோகபதவி என்பது நல்ல பதவிதானே? அதற்கு ஏன் வருந்த வேண்டும்?" என்றார் கவிஞர்.

அருகில் இருந்தோர் வருத்தம் மறைந்து, சிரித்தனர்.

## 50

## இந்தப் பொருளைப் பாருங்கள் !

ஏதேனும் ஒரு பொருளை வாங்கிவரச் சொன்னால், 'அதன் விலை எவ்வளவு?' 'ஏன் இவ்வளவு அதிகவிலை கொடுத்தாய்?' 'மீதம் எங்கே?' - இம்மாதிரி நச்சரிப்பு எல்லாம் கவிஞரிடம் கிடையாது. ஆனால், வாங்கிவந்த

பொருள் மட்டும் கவிஞர் விரும்பியபடி இருக்க வேண்டும். அப்படி இருந்து விட்டால், அதன் அழகில் லயித்து விடுவார். அவர் விரும்பியபடி அந்தப் பொருள் இல்லாவிட்டாலோ, வாங்கி வந்தவர் அவர் எதிரில் நிற்க முடியாது.

சில சமயங்களில், “இவர் வாங்கி வந்திருக்கிறார், பாருங்கள்” என்று அருகில் இருப்பவர்களிடம் காண்பிக்கத் தொடங்கி விடுவார்.

பொருளை வாங்கி வந்தவருக்கு வெட்கமாகிவிடும்.

## 51

## ரகசியச் செய்தி

ஒரு சமயம் புதுச்சேரி கடற்கரையில் கவிஞர், ஒரு வழக்கறிஞர், ஒரு நீதிபதி மூவரும் உரையாடிக் கொண்டிருந்தனர்.

வழக்கறிஞர் அப்பொழுது சென்னை நகரின் தோற்றம், கடற்கரை, உயர்நீதி மன்றக் கட்டடம், சட்டமன்றம், இப்படியாக வர்ணித்துக் கொண்டிருந்தார்.

கவிஞரும் அதை ஆமோதிப்பதைப் போல் தலையசைத்தபடி இருந்தார்

நீதிபதி கவிஞரின் காதில், “சென்னையைப் பற்றிய பேச்சை நிறுத்திவிடுங்கள். நான் சென்னைக்குப் போனதும் இல்லை; பார்த்ததும் இல்லை” என்று ரகசியமாகக் கூறினார்.

“சரி, அப்படியே சைக்கிளைப் பற்றிய பேச்சு தொடங்கினாலும் அதை நிறுத்தி விடுங்கள்” என்றார் கவிஞர் நீதிபதியிடம்.

நீதிபதிக்கு சென்னை நகர் தெரியாது!

கவிஞருக்கு சைக்கிள் ஓட்டத் தெரியாது!

## 52

## இனிமேல் இப்படிப் பாட வேண்டாம்

திருக்குறளுக்கு இசை அமைத்து, இசையோடு பாடி வந்தார் ஒரு பாடகர். அவருக்கு புதுச்சேரி முத்தமிழ் மன்றத்தில் கவிஞர் தலைமையில் பாராட்டு நடைபெற்றது.

"திருக்குறளை இசையோடு பாடிப் பரப்புவது நல்ல தொண்டு" என பலர் பாராட்டினார்கள்.

ஒவ்வொரு குறளையும் ஒவ்வொரு இசையில் பாடி கூட்டத்தினரை மகிழ்வித்தார் பாடகர். கூட்டமோ இசையில் மெய்மறந்திருந்தது.

திடீரென கவிஞர் எழுந்து பாடகரை நோக்கி, "நிறுத்து; நீ இனிமேல் பாட வேண்டாம்; குறளில் உள்ள சொற்களை இசைக்காக சிதைத்தும் பிரித்தும் திரித்தும் பாடுவாய் என்று எனக்கு முன்பே தெரியாமல் போய் விட்டது. இனி இந்த வேலையை விட்டுவிடு" என்று கண்டிக்கத் தொடங்கினார். கூட்டத்தில் திகைப்பு உண்டாயிற்று. பாடகரோ மேடையை விட்டு கீழே இறங்கிப் புறப்பட்டு விட்டார்.

"போகட்டும்; போகட்டும்; தமிழைக் கெடுக்கும் இத்தகையோர் முயற்சிக்கு துணைபுரியவே கூடாது" என்று முழங்கினார் கவிஞர்.

## 53

## "பிரியாணி வாங்கி வா"

ஒரு சமயம், மதுரையிலிருந்து கவிஞர் சென்னைக்கு ரயிலில் பிரயாணம் செய்தார். அவருடன் இளைஞர் ஒருவரும் இருந்தார். ரயில் திருச்சி வந்தது. பிளாட்

பாரத்தில், 'பிரியாணி, பிரியாணி' என ஒருவன் கூவிக் கொண்டு சென்றான். கவிஞருக்கு பிரியாணி மீது ஆசை உண்டாயிற்று. அருகிலிருந்த இளைஞரிடம், "தம்பி ஒரு பொட்டலம் பிரியாணி வாங்கி வா'' என அனுப்பினார். இளைஞரும் பிரியாணி விற்பவனைத் தொடர்ந்து சென்றார். அவனோ அந்தக் கடைசிக்குச் சென்று விட்டான்.

வண்டியோ நகரத் தொடங்கியது. கவிஞர் தவியாய் தவித்தார். கதவு அருகில் நின்று பார்த்தார். பிரியாணி வாங்கப் போன இளைஞரைக் காணவில்லை. அவ்வளவுதான், வண்டியிலிருந்து கீழே குதித்து விட்டார் கவிஞர். வண்டி பிளாட்பாரத்தை விட்டு தாண்டிக் கொண்டிருந்தது. பிரியாணி பொட்டலத்தோடு இளைஞர் ஓடி வந்தார். கவிஞர் நிற்பதைப் பார்த்து, "ஏன் ஐயா இறங்கி விட்டிங்க? நான் ஓடி வந்து ஏறியிருப்பேனே; பெட்டி படுக்கை எல்லாம் எங்கே?'' என்றார்

"நல்ல ஆள் நீ; நான் என்ன செய்வது? உன்னை விட்டு விட்டு நான் எப்படிப் போவது? ஒண்ணும் தெரியலே; இறங்கி விட்டேன்!'' என்றார் கவிஞர்.

பெட்டி, படுக்கை சென்னை நோக்கிச் சென்று, நிலையத்தில் பத்திரமாக எடுத்து வைக்கப்பட்டிருந்தது.

## 54

## கவிஞரின் தமிழ் உணர்வு

பாவேந்தர் உடல் நலம் மிகவும் குன்றி சென்னை பொது மருத்துவ மனையில் படுத்திருந்தார். சிறிது சிறிதாக நினைவு இழக்கும் நிலை.

பிரிவதற்கு இரண்டு நாட்கள் முன், டாக்டர் மு. வ. பாவேந்தரைக் காண மருத்துவமனைக்கு வந்திருந்தார்.

மு. வ வந்திருப்பதாக பாவேந்தரிடம் கூறப்பட்டது.

மு. வ. வைப் பார்த்த பாவேந்தர் புன்னகை செய்தார். உடனே கையசைத்து அருகில் வரச் சொல்லி, "அடுத்து நடைபெறக்கூடிய புலவர் குழுவின் கூட்டம் பெங்களூரில் நடைபெறப் போவதாக அறிந்தேன்; தமிழ் நாட்டின் இசைப் பாடகி திருமதி சுப்புலட்சுமியை அங்கே உள்ள தமிழ்ப் பகைவர்கள் பாட விடாமல் தடுத்துக் கலவரப் படுத்தி விட்டார்களே! அச் செயலுக்கு நான் கண்டனக் கூட்டம் நடத்தினேன். அங்கே போய் ஏன் புலவர் குழு கூட்டத்தை நடத்த வேண்டும்? அங்கே போய் நடத்த வேண்டாம் என்று போய்ச் சொல்லுங்கள்'' என கண்களில் ஒளிபடரக் கூறினார்.

இறக்கும் தருணத்தில் கூட தமிழ் உணர்வோடு பாவேந்தர் இருந்தார் என்பதற்கு இதுவே சான்று.

## 55

## குறும்புத்தனம்

பாவேந்தர் இளம் பருவத்தில் குயில் சிவாவுடன் சேர்ந்து பல குறும்புத்தனங்கள் செய்வது உண்டு.

அவர்கள் தெருவில், அடுத்த நாள் நடைபெற இருந்த மஞ்சள் நீராட்டு விழாவுக்காக முதல் நாள் வீட்டின் முகப்பில் வாழை மரம் தோரணம் கட்டியிருந்தார்கள். அன்று இரவு கவிஞரும் சிவாவும் சேர்ந்து அங்கே யிருந்த வாழைமரங்கள் தோரணத்தை வேறு ஓர் வீட்டில் கொண்டுபோய்க் கட்டிவிட்டு, ஊர்ச்சாவடியில் தங்கி

யிருந்த ஏழை எளியவர்களிடம் அந்த வீட்டில் காலையில் விருந்து என்றும் கூறிவிட்டனர்.

காலையில், ஏழை எளியவர்கள், சந்நியாசிகள் எல்லோரும் வந்து அந்த வீட்டின் முன் கூடிவிட்டார்கள். தெருவில் பெரிய ஆரவாரத்தோடு கூட்டம் நிரம்பியது...

அந்த வீட்டுக்காரர்கள் தங்கள் வீட்டில் வாழைமரம் கட்டப்பட்டிருப்பதையும், கூட்டத்தையும் கண்டு வியப்பும் திகைப்பும் அடைந்தார்கள்.

இவர்கள் செய்த குறும்பு!

## 56

## பணம் முக்கியமா?

'சக்தி' மாத இதழையும், 'சக்தி காரியாலயம்' என்னும் புத்தக வெளியீட்டு நிறுவனத்தையும் சிறப்பாக நடத்திய திரு. வை. கோவிந்தன் அவர்கள், கவிஞரின் நூல்களை வெளியிட விரும்பி, உரிய ராயல்டியை தருவதாகவும் கவிஞருக்கு கடிதம் எழுதினர்.

"நான் கவிதை எழுதும்போது சிந்தும் மைக்குகூட நீங்கள் தரும் ராயல்டி ஈடாகாது!'' என்று பதில் எழுதினர் கவிஞர்.

காலஞ்சென்ற திரு. வை. கோவிந்தன் அவர்கள் இதை என்னிடம் கூறிச் சிரித்தார்.

## 57

## சிபார்சுக்குத் தயங்குவதில்லை

பாவேந்தர் புதுச்சேரி வீட்டில் இருந்தாலும், வெளியூர் களில் தங்கி இருந்தாலும் பார்த்துப் பேசிவிட்டுப் போவ தற்காகப் பலர் வருவார்கள்.

சிலர், சிபார்சு செய்ய வேண்டும் என்று கேட்டு வரு வார்கள்.

பிள்ளைகளை பள்ளியில் சேர்ப்பதற்காகச் சிபார்சுக்கு வருவார்கள்.

வருகிறவர்களிடம், "அவரை எனக்குத் தெரியாது; நான் சொன்னால் அவர் செய்யமாட்டார்!" என்னும் சொற்களை கவிஞர் எப்பொழுதும் சொன்னதே இல்லை.

கூட்டிக் கொண்டு போய் உடனே சிபார்சு செய்வார்.

அரசியல்வாதிகள், மற்றும் சிபார்சு செய்வதே தொழி லாகக் கொண்ட சிலர் போல எவ்வித சலுகையோ, 'சன் மான'மோ பெறமாட்டார் கவிஞர்.

பெரியார், ஆர். கே. சண்முகம் செட்டியார், கலை வாணர், ஏ. இராமசாமி முதலியார், பி. டி. ராஜன் போன் றவர்களுக்கெல்லாம் சிபார்சுக் கடிதம் எழுதிக்கொடுப் பார் கவிஞர்.

மற்றவர்களைப் போல் 'நாளை', 'அடுத்தவாரம்' என்று தவணை சொல்லமாட்டார். உடனே, "தம்பி! தாளும் பேனாவும் கொண்டு வா" என்று கூறி உடனே எழுதிக் கொடுத்து விடுவார்.

ஒரு சமயம் இதை நேரில் கண்டபோது, "இப்படி எழுதிக் கொடுக்கும் கடிதங்களுக்கு, அவர்கள் செய்கிறார் களா?" எனக் கேட்டேன்.

'செய்கிறார்கள். செய்யவில்லை. என்றாலும், நான் வருத்தப்படுவதில்லை" என்றார் கவிஞர்.

## விளக்கெண்ணெய் வேண்டாம்!

இரண்டு மாதங்களுக்கு ஒரு முறை கவிஞருக்கு பேதிக்காக விளக்கெண்ணெய் கொடுப்பது வழக்கம். உணவு, மருந்து முதலானவற்றில் பழனி அம்மாள் மிகவும் எச்சரிக்கையாக இருப்பார். முதல் நாள் இரவே வாதநாராயண இலைகளைக் கொண்டுவரச் செய்து காய்ச்சி விளக்கெண்ணெயை ஊற்றி தயாரித்து வைத்துவிடுவார்.

ஒரு நாள், முறைப்படி தயார் செய்ததை எடுத்துக் கொண்டு கவிஞர் இருக்கும் இடத்துக்கு வந்தார் பழனி அம்மாள். விளக்கெண்ணெய் நாற்றம் கவிஞரின் மூக்கைத் துளைத்தது.

கவிஞர் வயிற்றைப் பிசைந்து கொண்டே, "பழனி அம்மா, இன்றைக்கு வயிறு சரி இல்லை; இன்றைக்கு வேண்டாம்" என கெஞ்சும் தோரணையில் கூறினார். அவரோ விடுவதாக இல்லை; கட்டாயப்படுத்தி குடிக்கும்படி வற்புறுத்தினார். கவிஞரோ வேண்டாம் என மன்றாடினார். "பின்னே, காய்ச்சிய எண்ணெய்யை என்ன செய்வது?" என சிறிது கடுமையாகக் கேட்டார்.

அவ்வளவுதான், "பிள்ளைகளா, இங்கே வாங்க" என எல்லோரையும் அழைத்து, அவர் குடிக்க வேண்டிய எண்ணெயை அவர்களைக் குடிக்கச் செய்து விட்டார்.

# பாவேந்தர் பாரதிதாசன் விழா

புரட்சிக் கவிஞர் என்றும் பாவேந்தர் என்றும் கவி அரசர் என்றும் போற்றிப் புகழப்படும் பாரதிதாசன் அவர்களின் 89வது பிறந்த நாள் விழாவை தமிழகத்தின் தலைநகரமாகிய சென்னையிலும் ஏனைய மாவட்டத் தலைநகர்களிலும் அரசு மிகச் சிறப்பாகக் கொண்டாடியது.

சென்னையில் கலைவாணர் அரங்கில் பாவேந்தரின் விழா ஏப்ரல் 29ல் காலை 8-30 மணிக்கு குடந்தை சீனிவாசன் அவர்களின் இன்னிசை நிகழ்ச்சியுடன் ஆரம்பம் ஆகியது.

தமிழ்நாடு அரசின் செய்தி - மக்கள் தொடர்புத் துறை துணை இயக்குநர் திரு. து. மு. காளியப்பா வரவேற்புரை கூறினார்.

விழாவைத் துவக்கி வைத்தவர் தவத்திரு குன்றக்குடி அடிகளார்.

அடுத்து உவமைக் கவிஞர் திரு. சுரதா அவர்களின் தலைமையில் 'பாவேந்தர் படைத்த பாத்திரங்கள்' என்னும் தலைப்பில் கவியரங்கம் நடைபெற்றது.

கவிஞர் புலமைப்பித்தன், கவிஞர் ஈரோடு தமிழன்பன், கவிஞர் இளஞ்செழியன், கவிஞர் முத்துராமலிங்கம், கவிஞர் பனப்பாக்கம் சீத்தா, கவிஞர் செங்கை பொதுவன், கவிஞர் அரசு மணிமேகலை ஆகியோர் கவிதைகளை அரங்கேற்றினர்.

பிற்பகல் 3-30 மணிக்கு தமிழ்நாடு அரசு சிறப்புப் பிரதிநிதி மாண்புமிகு க. இராசாராம் அவர்கள் தலைமையில் கருத்தரங்கம் நடைபெற்றது.

செய்தி-மக்கள் தொடர்புத் துறை உதவி இயக்குநர் வி. டி. வீரப்பன் அனைவரையும் வரவேற்றார்.

தலைமை உரைக்குப் பின்னர், 'பாவேந்தர் கண்ட இயற்கை' என்னும் தலைப்பில் திரு. சிலம்பொலி செல்லப்பன் உரையாற்றினார்.

'பாவேந்தர் கண்ட புதுமைகள்' என்னும் தலைப்பில் திரு. கா. வேழவேந்தன் உரையாற்றினார்.

'பாவேந்தர் கண்ட தமிழ் உணர்வு' என்ற தலைப்பில் டாக்டர் சு. பாலச்சந்திரன் உரை யாற்றினார்.

'பாவேந்தர் கண்ட தொழிலாளர்கள்' என்னும் தலைப்பில் திரு. டி. கே. சீனிவாசன் உரைநிகழ்த்தினார்.

மாலை 6-30 மணியளவில் மாண்புமிகு நீதிபதி திரு. ச. மோகன் அவர்கள் தலைமையில் நிறைவு விழா நடைபெற்றது.

செய்தி-மக்கள் தொடர்புத் துறை துணை இயக்குநர் திரு. சி. என். கிருஷ்ணபாரதி அனைவரையும் வரவேற்றார்.

தலைவரின் தலைமை உரைக்குப்பின்,

அரசுக் கவிஞர் கண்ணதாசன், திரு. நெ. து. சுந்தர வடிவேலு, நாவலர் நெடுஞ்செழியன் ஆகியோர் உரை நிகழ்த்தினார்கள்.

[உரைக் குறிப்புகள் இதன் பிற்பகுதியில் இணைக்கப் பட்டுள்ளன.]

பாவேந்தர் விழாவையொட்டி ஏற்பாடு செய்யப் பட்டிருந்த கவிதைப் போட்டியில் முதல் பரிசு பெற்ற திரு. சந்திரசேகரன், இரண்டாம் பரிசு பெற்ற திரு. ஜி. ராஜாராமன், மூன்றாம் பரிசு பெற்ற திரு. சண்முக

தாயுமானவன் ஆகியோருக்கும் ஓவியப் போட்டியில் முதல் பரிசு பெற்ற திரு. ரெங்கனுதன், இரண்டாம் பரிசு பெற்ற திரு. வி. கணேசன், மூன்றும் பரிசு பெற்ற திரு. இரா. மரியதாசன் ஆகியோருக்கும் மாண்புமிகு கல்வி அமைச்சர் திரு. செ. அரங்கநாயகம் அவர்கள் பரிசுகளை வழங்கினுர்.

பாரதிதாசன் விருதுக் கவிஞர்களுக்கு பத்தாயிரம் ரூபாய் பரிசு அளிக்கும் திட்டத்தைச் சென்ற ஆண்டு தமிழக அரசு அறிமுகம் செய்தது.

உவமைக் கவிஞர் சுரதா சென்ற ஆண்டு பரிசு பெற்ருர்.

இந்த ஆணடு, மறைந்த கவிஞர்கள் வாணிதாசன், எஸ். டி. சுந்தரம் இருவரின் குடும்பத்தவருக்கும் தனித் தனியாக பத்தாயிரம் ரூபாய் பரிசை அரசு அளித்தது. வாணிதாசனுக்கு உரிய பரிசுத் தொகையை அண்ணுரின் மனைவி ஆதிலட்சுமி அவர்களிடமும், எஸ். டி. சுந்தரம் அவர்களுக்கு உரிய பரிசுத் தொகையை அவரின் மகன் ராஜாவிடமும் வழங்கினுர் கல்வி அமைச்சர்.

பாவேந்தர் பாரதிதாசனின் படைப்புக்குறித்துச் சிறந்த நூல்களை எழுதிய ஆசிரியர்களுக்கு ஆயிரம் ரூபாய் பரிசு அளிக்கும் திட்டத்தை இந்த ஆண்டு தமிழக அரசு அறிமுகம் செய்துள்ளது. அதன்படி 'கவிஞரும் காதலும்' என்னும் நூலை எழுதிய புலவர் ந. இராமநாதன், 'புரட்சி முழக்கம்' நூலை எழுதிய டாக்டர் சாலை இளந்திரையன், 'பாரதிதாசன் கதைப் பாட்டு,' 'பாரதிதாசன் இலக்கியங்கள்' ஆகிய நூல்களை எழுதிய டாக்டர் ச. சு. இளங்கோ, 'புரட்சிக்கு வித்திடும் பாவேந்தர் பாட்டு' நூலை எழுதிய திரு. மயிலைநாதன் ஆகியோர் ஒவ்வொருவருக்கும் ஆயிரம் ரூபாய் பரிசையும் சான்று இதழையும் பட்டாடையையும் மாண்புமிகு கல்வி அமைச்சர் அளித்தார்.

பாவேந்தர் நூல்களை முதன் முதலில் சிறப்பாக வெளியிட்டமைக்காக திரு. முல்லை முத்தையா அவர்களுக்கு ஆயிரம் ரூபாய் பரிசையும் சான்று இதழையும், பட்டாடையையும் மாண்புமிகு கல்வி அமைச்சர் வழங்கினார்.

நிறைவு விழாச் சொற்பொழிவை மாண்புமிகு கல்வி அமைச்சர் நிகழ்த்தினார்.

நிறைவு விழாச் சொற்பொழிவுக்குப் பின்னர் செய்தி-மக்கள் தொடர்புத் துறை ஆய்வு அலுவலர் திரு. சி. நல்லரசு நன்றி கூறினார்.

அதன் பின்னர், அரசுக் கலைஞர் கலைமாமணி திருமதி வைஜயந்திமாலா பாலி அவர்கள் பாவேந்தரின் பாடல்களுக்கான நாட்டிய நிகழ்ச்சியை நிகழ்த்தினார்.

இன்னிசையுடன் துவக்கம் ஆகிய விழா இயற்றமிழின் துணையுடன் நாடக [நாட்டியத்] தமிழுடன் நிறைவு பெற்று விழாவுக்கு வந்திருந்த மக்களின் நெஞ்சங்களில் நிறைந்து, இன்னும் எதிரொலியை எழுப்பிக் கொண்டே இருக்கிறது!

## 1

## தலைமை உரை: திரு. க. இராசாராம்

பாரதிதாசன் வாழ்ந்த காலம், கவிஞர்கள் கடவுளைப் பற்றியே பாடி வந்த காலம்; மனிதனைப் பாடுவதற்குப் பயப்பட்ட காலம். அத்தகைய சூழ்நிலையில் ஆடு மேய்ப்பவனைக் குறித்து, வண்டிக்காரனைக் குறித்து, தொழிலாளரைக் குறித்து, முறம் பின்னும் பெண்ணைக் குறித்து, பாவேந்தர் எழுதினார் என்றால் அது போற்றத் தகுந்த செயல்; மனிதாபிமானத்தின் அடிப்படையில் அமைந்த செயல்.

1945 என்று நினைவு. திருச்சியில் திராவிடர் கழக மாநாடு நடைபெற்றது. அதிலே 'போர் வாள்' நாடகம் நடந்தது. அந்த நாடகத்திலே சிலர் "புரட்சி ஓங்குக! புரட்சி ஓங்குக!" என்று கொடியைப் பிடித்தவாறு கூக்குரல் இட்டுக் கொண்டே வருவார்கள். அதைப் பார்த்த பாரதிதாசன், "கத்தியை எடுத்துக் கொண்டு ஓடினுல் அல்லவா புரட்சி ஓங்கும்? கொடியைப் பிடித்துக் கொண்டு போனுல் புரட்சி எப்படி ஓங்கும்?" என்று கேட்டார்.

"கல்வி இல்லாத பெண்கள் களர்நிலம். அதில் புல் முளைப்பது உண்டு, நல்ல புதல்வர்கள் உதிப்பதில்லை" என்று குறிப்பிட்டார்.

வீரம்-நேர்மை-அன்பு-சீர்திருத்தம்-தமிழ்த் திருமணம்-விருந்தோம்பல்-ஆகிய பண்புகளை-குடும்ப விளக்கின் மூலம் உணர்த்துகிருர்.

டெலிவிஷனைப் பற்றிக்கூட அவர் எண்ணியிருக்கிருர். அது 'சஞ்சீவி பர்வதத்தின் சாரல்' என்னும் கவிதையின் மூலம் தெரிகிறது.

தமிழ் மொழி உயர்ந்த மொழியாக இருக்க வேண்டும் என்பதில்-தமிழன் சிறப்படைய வேண்டும் என்பதில் அவர் மிகுந்த பற்று வைத்திருந்தார்.

நான் மலேசியா போன்ற வெளிநாடுகளுக்குச் சென்ற போது கவனித்தேன்; அங்கெல்லாம் பாரதிதாசனின் பாடல்கள் பாடப்படுவதை அறிந்தேன்.

வங்கத்தில் பிறந்த தாகூருக்கு அந்த மாநில மக்கள் மிகவும் பெருமை சேர்த்து வருகிருர்கள். தாகூரின் நூல்கள் விற்பனை குறைந்த போது, இளைஞர்கள் அவரது

நூல்களைச் சுமந்து சென்று வீடு வீடாகக் கொண்டு சென்று விற்ருர்கள். வங்கத்து மக்கள் அனைவரும் தாகூரைப் போற்றினுர்கள். இல்லந்தோறும் அவரது பாடல் பாடப் பட்டது. அதுபோன்று நமது குடும்பங்களிலும் பாரதி தாசனின் பாடல் பாடப்பட வேண்டும். புதிய இந்த மனப் பான்மை அமைய வேண்டும்-விளையவேண்டும்.

## 2

## பாவேந்தர் கண்ட இயற்கை

### சிலம்பொலி சு. செல்லப்பனுர் உரைச் சுருக்கம்

"தமிழால் பாரதி தகுதி பெற்றதும் பாரதியால் தமிழ் தகுதி பெற்றதும்" என்று பாவேந்தர் குறிப்பிட்டிருக் கிருர். அதைப்போலவே பாவேந்தரால் இயற்கை பெருமை பெற்றதும் இயற்கையால் பாவேந்தர் பெருமை பெற்றதும் என்று குறிப்பிடலாம்.

இயற்கைக் காட்சிகளை மிக எளிமையாக சங்கப் புலவர்கள் போலச் சொல்லுவதில் அவர் வல்லவர்.

**" குயில் கூவிக் கொண்டிருக்கும் கோலம் மிகுந்த**
**மயில் ஆடிக் கொண்டிருக்கும்.....................**
**...............சஞ்சீவி பருவதத்தின் சாரல்"**

என்று இயற்கையை இயற்கையாகவே எடுத்துச் சொல்லி யிருக்கிருர்.

காட்டைப் பற்றி அவர் பாடிய செய்யுளில் காட்டின் கொடுமையை நமக்கு நன்கு எடுத்துக் காட்டுகிருர்.

**" முட்புதர்கள் மொய்த்த தரை எங்கும்,**
**..........................................."**

இயற்கையிலே தோய்ந்தவர் பாரதிதாசன்.

பாவேந்தர் குடும்ப விளக்கிலே விருந்தோம்பல் பகுதியில் சைவ உணவைக் குறிக்கிறாரே தவிர அசைவ உணவைக் குறிப்பிடவே இல்லை. அவர் அசைவ உணவுப் பிரியர்தான் என்றாலும் நூலில் சைவ உணவைப்பற்றியே சொல்லி வருகிறார்.

குரங்கின் விளையாட்டை அவர் மிக அழகாக எடுத்துக் கூறுகிறார்.

**ஆலினைக் காற்று மோதும்**
**அசைவனை எனச் சிரித்த,**

**..........................**

பாரதிதாசன் இயற்கையோடு இயைந்தவர் என்றாலும் அவர் மனித சமுதாயத்துக்கு என்னென்ன சொன்னார் என்பதை நாம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். வெறும் கற்பனைத் தேர் ஓட்டுவதால் பயன் கிடையாது என்பதை அவர் அறிந்திருந்தார்.

பொதுவாக/புலவர்கள் கழுகுப் பார்வை கொண்டவர்கள். அதாவது ஆழமான பார்வையுடையவர்கள் என்பதை மட்டும் இங்கே குறிப்பிடவில்லை; நல்லதைக் காணாது கெட்டதையே காணும் பார்வை கொண்டிருந்தார்கள். ஆனால், பாவேந்தர் அவர்களில் வேறுபட்டிருந்தார்.

தெய்வப்பாடல் எழுதிய அக் காலக் கவிஞர்களுக்கு இயற்கை தெய்வமாகத் தெரிகிறது. கறுப்பு வானம் திருமாலின் வடிவமாகத் தெரிகிறது ஒரு கவிஞருக்கு. ஆனால், பாவேந்தர்க்கு அப்படித் தோன்றவில்லை.

'கேள்வி இல்லார் நெஞ்சம் போல் இருண்டு காணப் படுகிறது வானம்' என்று குறிப்பிடுகிறார்.

3

# பாவேந்தர் கண்ட புதுமைகள்

## கவிஞர் வேழ வேந்தன் உரைச் சுருக்கம்

நாட்டில் ஏரிகள், நீர் நிலைகள், குளங்கள் நிறைய உள்ளன. அவற்றில் கொக்குகள் இருக்கலாம். ஆனால், அங்கெல்லாம் வேற்று நாட்டுப் பறவைகளா வருகின்றன? எங்கள் செங்கை மாவட்டத்தில் உள்ள வேடந்தாங்கல் ஏரிக்குத்தான் சைபீரியாவில் இருந்துகூடப் பறவைகள் வருகின்றன. வேடந்தாங்கல் ஏரிபோல் புகழ் பெற்றவர் நமது பாவேந்தர்.

'பெண்ணிற் பெருந்தக்க யாவுள'

என்று கூறினார் வள்ளுவர். பெண்ணுக்கு அந்த அளவு சிறப்புத் தரப்பட்டது. ஆனால், காலம் மாறியது. பெண்ணுக்குப் பெருமை குறைந்தது. 'ஈன்று புறந்தருதல் என்றலைக் கடனே' என்று மட்டும் பெண்ணின் தொண்டாக மாறியது. இயற்கையிலே ஒரு தாழ்வு மனப்பான்மை பெண்ணினத்தில் உருவாகியது. அதனால்தான் ஔவையாரே ஒரு பெண்பாலராக இருந்தும் 'தையல் சொல் கேளேல்' என்று கூறியிருக்கிறார். பின்னர் 'பெண்ணென்று வந்த மாயப் பிசாசம்' என்று ஒரு புலவர் குறிப்பிட்டார்.

'ஆலகால விஷத்தை நம்பலாம்.........சேலை கட்டிய
மாதரை நம்பினால் தெருவில் நின்று தியங்கித் தவிப்பரே'

என்று விவேக சிந்தாமணி கூறியது. இதற்குப் பிறகு தேசிக விநாயகம்பிள்ளை தோன்றினார். 'மங்கையராய்ப் பிறப்பதற்கே நல்ல மாதவம் செய்திட வேண்டுமம்மா'— என்று குறிப்பிட்டார்.

**'பட்டங்கள் ஆள்வதும் சட்டங்கள் செய்வதும்**
**பாரினில் பெண்கள் நடத்த வந்தோம்'**

என்று பாரதியார் குறிப்பிட்டார்.

பின்னர் வந்த பாரதிதாசன்,

**வண்மை உயர்வு மனிதர் தவமெல்லாம்**
**பெண்மையினுல் உண்டென்று பேசவந்த பெண்ணழகே**
**நாயென்று பெண்ணை நவில்வோர்க்கும் இப்புவிக்குத்**
**தாயென்று காட்டி தமிழர்க்கு வாய்த்தவளே!**

என்ருர்.

பாவேந்தர் இந்தக் காலச் சமுதாயத்தில் இருந்து வேறு படுகிருர். பெண்மைக்கு உயர்வு கொடுக்க விரும்புகிருர்.

'பகுத்துண்டு பலலுயிர் ஓம்புதல்' என்ருர் வள்ளுவர். காரல் மார்க்ஸின் (Capital) நூல் உருவாவதற்கு முன்பே உருவாகியது குறள்.

**" எல்லார்க்கும் எல்லாச் செல்வமும் எய்தலாலே**
**இல்லாரும் இல்லை உடையாரும் இல்லை மாதோ."**

என்ருர் கம்பர்.

'தனி ஒருவனுக்கு உணவில்லை எனில் செகத்தினை அழித்திடுவோம்' என்ருர் பாரதியார். இதே பொது வுடைமைத் தத்துவத்தை பாரதிதாசன் 'உலகப்பன்' மூலமாகப் புதுமையாக எடுத்துரைத்தார்.

'பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும்' என்ருர் வள்ளுவர். 'சாதி இரண்டொழிய வேறு இல்லை' என்ருர் ஔவையார்.

பதினெண் கீழ்க் கணக்கு நூல்களில் கூட,

**'நீரளவே ஆகுமாம் நீராம்பல்**
**நூலளவா குமாம் நுண்ணறிவு**
**குலத்தளவே ஆகுமாம் குணம்'**

என்று குறிப்பிடுகிறது.

கம்பன் கூட,

**'செட்டி மக்கள் வாசல் வழிச் செறல்லோமே, செக்காரப்**
**பொட்டி மக்கள் வாசல் வழிப் போகோமே''**

என்றார். புதுயுகக் கவி பாரதி,

**'சாதிகள் இல்லையடி பாப்பா—குலத்**
**தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம்'**

என்றார்.

**''பார்ப்பானை ஐயரென்ற காலமும் போச்சே''**

என்று கொச்சைத் தமிழில் அழுத்தமாக எடுத்துச் சொன்னார். பாரதிதாசன்,

**''பொய்க் கூற்றே சாதியெனும் ஆரியச் சொல்**
**அது புது நஞ்சு; பொன் விலங்கு''**

என நயத்துடன் சொன்னார்.

காதலைப் பற்றி குறிப்பிடும்போதும் புதுமை மின்னும் வகையில் கவிதை படைத்தார். புதுமையை புதுமையாகவே சொல்லியவர் பாரதிதாசன்.

**''கண்ணின் கடைப்பார்வை காதலியர் காட்டி விட்டால்**
**மண்ணில் குமரருக்கு மாமலையும் ஓர் கடுகாம்''**

என்றார் பாரதிதாசன்.

தமிழ் மீண்டும் அரியாசனம் ஏறவேண்டும் என்று பாரதிதாசன் விரும்பினார்.

புளிய மரம், வேப்பமரம் வளருகின்றன, மடிகின்றன. தாமாகவே மரபை உருவாக்கிச் செல்வது இல்லை. ஆனால், வாழைமரம் அப்படி அல்ல. அது கன்றுகளை உருவாக்கி மடிகிறது. அதுபோல, பாரதிதாசன் பல்வேறு கவிஞர்களை

உருவாக்கி மறைந்தார். என்றாலும் உருவாக்கம் பெற்ற வங்கத்து நிகழ்ச்சி நினைவுக்கு வருகிறது. அதைப்போன்று நமது தமிழகத்திலும் ஒவ்வொருவரும் பாவேந்தரின் கவிதை நூல்களை வாங்கி தங்கள் வீட்டுப் பெண்களிடம் கொடுத்துப் படிக்கச் சொல்லவேண்டும்.

## 4

## பாவேந்தர் கண்ட தமிழ் உணர்வு

### டாக்டர் எஸ். பாலச்சந்திரன் உரைச் சுருக்கம்

தமிழ் நாட்டில் தமிழுக்கு அவமரியாதை ஏற்பட்ட போது பாவேந்தர் கொதித்தார்; வேதனை யடைந்தார்; துன்பப்பட்டார். அதன் விளைவுதான் 'தமிழியக்கம்' என்னும் நூல் உருவாகியது.

பாவேந்தருக்கு தமிழ்தான் உயிர்; உலகில் உள்ள மற்ற இன்பங்கள் யாவும் அடுத்தபடிதான்! இன்னும் சொல்லப் போனால், அண்ணன், தம்பி, அன்னை, தந்தை, ஏன்-குயில் பேசும் மனைவி-அன்பைக் கொட்டுகின்ற குழந்தைகள் எல்லோரும் இரண்டாம் நிலைதான்! அனைவரினும் முதலாவதாகத் தமிழ் திகழ்கிறது அவருக்கு.

பாரதிதாசன் நாடெங்கும் இலவச நூற்கழகம் வேண்டும் என்று பாடினார்; தமிழக அரசு எல்லா ஊரிலும் இலவச நூற்கழகத்தை உருவாக்க வேண்டும்.

அவரது கவிதையை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து-மற்ற மாநிலத்தவர்-மற்ற நாட்டவர் தெரிந்து கொள்ளச் செய்யவேண்டும்.

5

# பாவேந்தர் கண்ட தமிழ் உணர்வு

## தத்துவ மேதை டி. கே. சீனிவாசன் உரைச் சுருக்கம்

காலத்தை உருவாக்கிய கவிஞர்கள் பாரதியும் பாரதிதாசனும். மற்ற கவிஞர்கள் எல்லாம் காலத்தால் உருவானவர்கள்.

பாரதி பூகோளத்தைப் பாடினன்.

பாரதிதாசன் காலத்தைப் பாடினன்.

பாரதி ஆவேசத்துடன் பாடினன்.

பாரதிதாசன் அறிவோடு பாடினன்.

பாரதி 'சிந்து நதி மிசை நிலவினிலே' என்று பாடினனே அதன் பொருள் என்ன? அவன் திராவிடப் பண்பாட்டை வலியுறுத்துகிருன் என்றே எனக்குத் தோன்றுகிறது.

பாரதி தோணியிலே போகிருன். சேரநாட்டு இளம் பெண்ணை அருகிலே வைத்துக்கொள்கிருன்; பாடுவதற்கு சுந்தரத் தெலுங்கை வைத்துக்கொள்கிருன். ஆனல், அவன் தோணி விடுவதற்குத் தேர்ந்தெடுத்த நதி எது தெரியுமா? கங்கை இல்லை, யமுனை இல்லை, சரஸ்வதி இல்லை. அவன் தேர்ந்தெடுத்துக் கொண்டது சிந்து நதி! சிந்து நதியில்தான் திராவிட கலாச்சாரம் தோன்றியது என்பது வரலாற்று உண்மை! எனவேதான் பாரதி திராவிட உணர்வின் அடிப்படையிலே கவிதை பாடினன்.

'முட்டாள்களும் பாடுவார்கள் கடவுள் பாடல்' என்ருர் பாரதிதாசன். காதலைப் பற்றியும் முட்டாள் கூடப்

பாட முடியும். ஆனால், பாவேந்தர் காதலைப் பற்றிய பாடலில் காதலுக்குச் சமுதாயம் ஏற்படுத்தி வரும் தடைகளைக் குறித்துப் பாடினார்.

காதலியைக் குறித்துப் பாடும்போது கூட, தொழிலாளியின் நினைவுதான் அவருக்குத் தோன்றுகிறது.

நிலவைப் பாடும்போது கூட தொழிலாளியின் நினைவு தான் அவருக்கு ஏற்படுகிறது.

சோலையைப் பார்க்கும் போது கூட அதை உருவாக்கிட ரத்தம் சொரிந்த தோழர்களைக் குறிப்பிடுகிறார்.

சோலையைப் பார்க்கும்போது பூ தெரியும், பூவின் வாசம் தெரியும், பல கவிஞர்களுக்கு! ஆனால் பாரதி தாசனுக்கு பூங்காவை உருவாக்கிய தோழர்கள் தெரிகிறார்கள். "சித்திரச் சோலைகளே... எத்தனை ரத்தம் சொரிந்தனரோ உங்கள் வேரினிலே" என்கிறார்.

'தொழிலாளிகளுக்குக் கூலி கொடுக்க வேண்டுமே தவிர, அவர்களுக்குப் பிச்சை கொடுக்கக் கூடாது" என்ற கருத்து உடையவர் பாரதிதாசன்!

அவர் தமிழை நேசித்தார்; தொழிலாளர்களை நேசித்தார்.

## 6

## தலைமை-நிறைவு விழாச் சொற்பொழிவுச் சுருக்கம்

### மாண்புமிகு நீதிபதி எஸ். மோகன் அவர்கள்

நாட்டிற்குப் பயன்தரும் கவிதையைக் கொடுத்த கவிஞன் இருந்திருக்கிறான் என்றால்—உழைப்பாளரின் உரிமைக்குக் குரல் கொடுத்த கவிஞன் ஒருவன் இருந்திருக்

கிருன் என்ருல் அது பாரதிதாசன் ஒருவரே என்று அறுதி யிட்டுக் கூற முடியும்.

இவருக்கு முன்ஞல் கவிஞர்கள் தமிழ் நாட்டில் இருந்த

தில்லையா? இவருக்கு முன்ஞல் தமிழ் நாட்டில் கவிதைகள் பாடப்பட்டதில்லையா? உங்கள் எண்ணத் தேரைக் கொஞ்சம் பின்னேக்கிச் செலுத்த வேண்டுகிறேன்.

பன்னிரண்டு ஆழ்வார்கள், அறுபத்து மூன்று நாயன் மார்கள் பாடிய திருமுறைகள்-திவ்வியப் பிரபந்தங்கள் எல்லாம் இருந்திருக்கின்றன. அவர்கள் எல்லோரும்,

**புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா**
**உன்னடி என்மனத்தே மறவாதிருக்க**
**வரம் வேண்டும்''**

என்று வேண்டினர்கள்.

எல்லாவற்றையும் கடவுள்களாகக் கண்டனர் அவர்கள்.

கடவுள், காதல் என்ற இரு பொருள்களை மட்டுமே அக் காலத்துக் கவிஞர்கள் சிறப்பித்துப் பாடிக் கொண்டிருந்தார்கள்.

கோவை, மடல், தூது போன்ற சிறு பிரபந்தங்களைப் பாடி, அவற்றின் மூலமாக காதலுற்ற தலைவிகளின் துன்பங்களை எடுத்துக் கூறி வந்தார்கள்.

இந்த நிலையை மாற்ற இருபதாம் நூற்ருண்டில் இரு கவிஞர்கள் தோன்றினர்கள். பாரதியும் பாரதிதாசனும் தான் அந்த இரு கவிஞர்கள்.

நாடு விடுதலை பெறப் பாடினார் பாரதி!
மொழி விடுதலை பெறப் பாடினார் பாரதிதாசன்!
'சாதிகள் இல்லையடி பாப்பா' என்றார் பாரதி!
அவரை விட ஒரு படி மேலே சென்று,
"இருட்டறையில் உள்ளதடா உலகம்-சாதி
இருக்கின்றதென்பானும் இருக்கின்றானே"
என்றார் பாரதிதாசன்,

# 7

## எல்லோருக்கும் கல்வி

### முன்னாள் துணைவேந்தர் சுந்தர வடிவேலு உரைச் சுருக்கம்

மனிதன் உண்மை பேச வேண்டும்; உண்மையை எழுத வேண்டும். அதற்குத்தான் என்றும் பெருமை கிடைக்கும். உண்மையை எழுதிப் பெருமை பெற்றவர் பாரதிதாசன்.

சமுதாய அறியாமையை—கோளாறுகளை நீக்கக் குரல் கொடுத்தார் பாரதிதாசன்.

மலைகளை அல்ல—கடல்களை அல்ல—மக்களைக் கொண்டது நாடு! ஒரு நாட்டுக்கு எத்தனை சிறப்பிருந்தாலும் நூற்றுக்கு முப்பது பேர்தான் அந்த நாட்டில் படித்தவர்கள் என்றால் இதிலே பெருமை கிடையாது. இந்த இழிநிலையைக் கண்ட பாரதிதாசன் வருந்தினார்.

எங்களைப் போன்ற படித்தவர்கள்—படிக்காதவர்களுக்குக் கல்வி வழங்காமல் இருக்கும் நிலையைக் கண்டு கொதிப்படைந்தார்.

**“ கல்லாரைக் காணுங்கால்**
**கல்வி நல்காக்**
**கசடர்க்குத் தூக்கு மரம்**
**அங்கே உண்டாம்”**

என்று கோதிப்புடன் கூறினார்.

நாடு முழுதும் கல்வி நிறைந்திருக்க வேண்டும் என்று அவர் அவாவினார்.

**“ என்னரும் தமிழ் நாட்டின் கண்**
**எல்லாரும் கல்வி கற்று**
**உன்னத இமய மலை போல.........”**

என்று கூறினார்.

அறிவுக் கண் திறக்காதபோது—நாடு விடுதலைக் கதவு திறந்தால் பயன் என்ன? எனவே, அறிவுக் கண் தரும் கல்வி எல்லோருக்கும் கிடைக்க வேண்டும் என்பதை வலியுறுத்தினார் பாரதிதாசன்.

[குறிப்பு: பாவேந்தர் விழா நிகழ்ச்சி செய்திப் பத்திரிகை அளவில் நின்றுவிடாமல், வாசகர்கள் நினைவு கொள்வதற்காக இதில் இணைத்துள்ளேன். இயன்றவரை குறிப்பு எடுத்து உதவியர் ‘தமிழரசு’ துணை ஆசிரியர் புலவர் தமிழ்ப்பித்தன் அவர்கள்.]

## 8

## அரசவைக் கவிஞர் கண்ணதாசன் உரைச் சுருக்கம்

ஏழ்மையைக் குறித்துக் கம்பனும் கூறாத அளவுக்கு—கருத்துகளைக் கூறியவர் பாரதிதாசன்.

“முதலாளியைத் தோணியாகவும் தொழிலாளியை புனலாகவும் உருவகப்படுத்தி, சூறை ஒன்று மோது

மாயின் தோணி ஓட்டம் மேவுமோ?'' என்று மிகத் தெளி வாகக் கேட்டார்.

பாவேந்தர் சுயமரியாதைக் கவிதைகளை எழுதுவதற்கு முன்பு சுப்பிரமணியர் துதி அமுது எழுதியவர்தான்! பரிணும வளர்ச்சியின் காரணமாக அவர் மாறியிருக்கிருர்.

மனிதன் நாளுக்கு நாள் அறிவு பெறுகிருன். அதுதான் Evolution.

சிறு குழந்தைப் பருவத்தில் இருந்த அறிவு—வயது ஏற ஏற மாறுகிறது—வளர்கிறது.

எனவே மனிதர்களின் வாழ்வில் Evolution இருக்க வேண்டும் அல்லது Revolution இருக்கவேண்டும். இரண் டும் இல்லாவிட்டால் Devaluation ஆகவேண்டியது தான்!

## 9

## பரிசும் விருதும்

பாரதிதாசன் பற்றிய புத்தகம் எழுதிய 4 பேரு தலா 1,000ரூபாய் பரிசு வழங்கப்பட்டது. இதை அமைச் அரங்கநாயகம் நேற்று வழங்கிஞர்.

### பாரதிதாசன் விழா

தமிழக அரசின் சார்பில் புரட்சிக் கவிஞர் பார தாசன் 89-வது பிறந்த நாள் விழா சென்னை கலைவான அரங்கில் நேற்று நடந்தது.

விழாவை முன்னிட்டு கவிதைப் போட்டி, ஓவிய போட்டி ஆகியவை நடந்தன. இவைகளில் வெற்றி பெற் 6 பேர்களுக்கு பரிசுகள் வழங்கப்பட்டன.

**4 பேருக்கு ரூ. 1000**

பாரதிதாசன் பற்றி புத்தகம் எழுதிய புலவர் ராமநாதன் (கவிஞரும் காதலும்), சாலை இளந்திரையன் (புரட்சி முழக்கம்), இளங்கோ (பாரதிதாசன் கவிதைப் பாடல்கள், பாரதிதாசன் இலக்கியம்), மயிலை நாதன் (புரட்சிக்கு வித்திடும் பாவேந்தர் பாட்டு)ஆகிய 4 பேருக்கு தலா ஆயிரம் ரூபாய் பரிசு வழங்கப்பட்டது.

**பதிப்பாளர்க்கு ரூ.1000**

முதல் முதலில் பாரதிதாசன் புத்தகங்களை சிறந்த முறையில் பதிப்பித்த பதிப்பாளர் முல்லை முத்தையாவுக்கு ஆயிரம் ரூபாய் பரிசு வழங்கப்பட்டது.

இவர்கள் 5 பேரையும் அமைச்சர் அரங்கநாயகம் பாராட்டி பொன்னாடை போர்த்தினார்.

**விருது**

பாரதிதாசன் பரம்பரைக் கவிஞராக இருந்து மறைந்த கவிஞர் எஸ். டி. சுந்தரம், கவிஞர் வாணிதாசன் ஆகியோர் குடும்பத்துக்கு தலா 10 ஆயிரம் ரூபாயும் பாவேந்தர் பாரதிதாசன் விருதும் வழங்கப்படும் என்று தமிழக அரசு அறிவித்து இருந்தது.

இந்த விழாவில் அமைச்சர் அரங்கநாயகம் இந்த ரொக்கப் பணத்தையும், விருதையும் வழங்கினார்.

**–தினத்தந்தி ஏப்ரல் 29, 1979**

## 10

## பாவேந்தரின் முன்னுரை

தோழர் முத்தையா நம் வீட்டுக்கு வந்தார். நம்மை விட அவருக்கு நம் பிள்ளை—மன்னர்மன்னன் மிக வேண்டியவர்.

இருவரும் நம் பழந்தாள் அனைத்தையும் பார்த்துப் பொறுக்கினார்கள். அவற்றினின்று அவர்கட்கு, நான் முன்னாளில் எழுதியனவும், செய்தித் தாளில் வந்தவற்றின் நறுக்குகளும் கிடைத்தனவாம்.

அவைகளின் பெயர் 'காதல் நினைவுகள்' என்று என்னிடம் கூறி இச்சிறு நூலையும் காட்டினார்கள்.

—பாரதிதாசன்

['காதல் நினைவுகள்' என்னும் பாவேந்தரின் கவிதை நூல் 1944இல் முதல் பதிப்பு வெளியிட்டதில் பாவேந்தர் மேற்கண்டவாறு குறிப்பிட்டிருந்தார்.]

## 11

## மிகவும் பொருத்தமானவர்

முல்லை எங்ஙனம் மனம் மகிழ மணம் ஊட்டுமோ அங்ஙனமே முல்லை முத்தையாவின் எழுத்துகளும் அகம் மலர மகிழ்வூட்டும். அவர் முல்லை வெளியீட்டின் மூலம், தமிழ் உலகம் தமிழ் மணம் கமழச் செய்தார் என்பதை யாவரும் அறிவர். அவர்தான் புரட்சிக்கவிஞர் பாரதிதாசனின் புரட்சிக் கவி வெள்ளத்தைத் தமிழ் உலகத்தில் பாய்ச்சினவர். அவ் வெள்ளத்தால் பழமை என்ற வழுக்

கைப் பாசிகளும், மூடப் பழக்க வழக்கங்கள் என்ற முடை நாற்றங்களும் தமிழ் நிலத்தினின்றும் அடித்துக் கொண்டு போகப்பட்டன. அதற்காக அவருக்குத் தமிழ் உலகம் நன்றி செலுத்தக் கடப்பாடு உடையது.

பண்டைக் காலத்திலே, நம் நாட்டிலே பல தமிழ் அறிஞர்கள் வாழ்ந்தார்கள். அவர்களுடைய வாழ்க்கை வரலாறுகளும் பிற குறிப்புகளும் இப்பொழுது நமக்குக் கிடைத்தில. அக்காலத்தில் உள்ள தமிழ் அறிஞர்கள் இதில் அக்கறையும் செலுத்தவில்லை. ஆனால், ஓர் இருவர் 'விநோத ரச மஞ்சரி' என்ற உரை நடை மூலமும், 'தனிப் பாடல் திரட்டு' என்ற தமிழ்ச் செய்யுள் கோவை மூலமும், சில குறிப்பிடத்தக்க புலவர்களின் சுவையான நிகழ்ச்சிகளைக் குறிப்பிட்டுள்ளனர். அவைதான் நாம் அறியும் தமிழ்ப் புலவர் சரித்திரங்கள்.

நம் முல்லை முத்தையா அவர்கள் இது போன்ற குறை இனி ஏற்படா வண்ணம், பகுத்தறிவின் ஒளியாய் விளங்கும் புரட்சிக் கவிஞர் பாரதிதாசனின் வாழ்க்கை வரலாற்றில் சில சுவையான நிகழ்ச்சிகளை தாம் நேரில் கண்டறிந்தவாறு மிக்க இனிய எளிய நடையில் எழுதி உதவியிருக்கின்றார்.

அவர் புரட்சிக்கவிஞர் பாரதிதாசனோடு பல ஆண்டுகள் நெருங்கிப் பழகியவராதலால், அவருடைய வாழ்க்கையில் நிகழ்ந்த சில சுவையான நிகழ்ச்சிகளை எடுத்துக் கூறுவதற்கு அவர் மிகவும் பொருத்தமானவரே!

**அறிஞர் மே. சக்கரவர்த்தி நயினார்.**

# புகழ் பரப்பியவர்

காந்தியடிகளின் எழுபதாவது பிறந்த நாள் விழாவில், டாக்டர் ராதாகிருஷ்ணன் பதிப்பித்து வெளியிட்ட நூலை முன்மாதிரியாகக் கொண்டு அதுபோன்ற ஒருநூலை பாரதிதாசனைப் பற்றி திரு. முல்லை முத்தையா 1946இல் உருவாக்கினார். அதன் விளைவாக மாறுபட்ட அரசியற் கொள்கை யுடையவர்களிடமும் பாரதிதாசனைப் பற்றி தெரிவிக்கும் வாய்ப்பும், பாரதிதாசனைப் பற்றி அவர்களுடைய கருத்துகளைத் தமிழ் மக்களுக்கு அறிவிக்கும் பேறு ஏற்பட்டன. நாவலர் சோமசுந்தர பாரதியார், மறைமலையடிகள், திரு. வி. க. ஆகிய பேரறிஞர்களுடன் பாரதிதாசனுக்குத் தொடர்பு ஏற்படுத்தியவர் முல்லை முத்தையா அவர்கள்தான். 1948இல் சென்னையில் சர்வகட்சி மாநாடு ஒன்றைக் கூட்டி, பாரதிதாசனுக்கு நிதி கொடுக்க ஆக்கம் தேடியவரும் இவரே. அப்போது பாரதிதாசனுடைய நூல்களை அறிஞர் பலருக்கு அனுப்பி நாடெங்கும் அவரை முல்லை முத்தையா அறிமுகப்படுத்தினார். 18—2—1946இல் முல்லை முத்தையா அவர்களுக்குப் பேராசிரியர் நாவலர் சோமசுந்தர பாரதியார் எழுதிய பின்வரும் கடிதமும் இங்கே குறிப்பிடத்தக்கது.

-சோமலெ

**தமிழ்வாணர், திரு. முத்தையா அவர்கட்கு**
**முல்லைப் பதிப்பகம்—சென்னை.**

அன்புடையீர்,

நலம். தாம் அனுப்பிய கவி பாரதிதாசன் இயற்றிய செய்யுட் புத்தகங்கள் வந்தன. புத்துவகை தந்தன;

'குடும்பவிளக்கு' முதற்பகுதி உதவுக. இதுவரை இவர் கவி களைப் படித்து மகிழாமைக்கு மிகவும் வருந்துகிறேன். எல்லாம் நல்லனவாயினும் "அழகின் சிரிப்பு" என்னை அவருக்கு ஆளாக்கிவிட்டது.

மாடப்புறுவும் மடக்கிளியும் மானும் வானும்
ஏடவிழ் பூ யாரோ டிருமலையும்—ஆடலையும்
பாரதிரத் தம் கதையைப் பண்கனியப் பாடவிடும்
பாரதிதாசன் புலமைப் பண்பு.

பசுமலை
18–2–46

அன்பன்,
ச. சோ. பாரதி.

## 13

## நால்வரில் முதல்வர்

கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளையின் 'மலரும் மாலையும்' நாமக்கல் கவிஞர் இராமலிங்கம் பிள்ளையின் 'தமிழன் இதயம்,' புரட்சிக் கவிஞர் பாரதிதாசனின் 'பாரதி தாசன் கவிதைகள்', பாலபாரதி ச. து. சுப்பிரமணிய யோகியின் 'தமிழ்க் குமரி'—இந்த நான்கு கவிதைத் தொகுதிகள் மட்டுமே பல ஆண்டுகளுக்கு முன் வெளி வந்தவை. பிரசித்தமானவை. இவற்றையே அக்காலத்தில் விமர்சித்து எழுதுவார்கள்.

ஒவ்வொரு கவிஞரையும் ஒவ்வொரு சாரார் ரசித்து, பின்பற்றி, புகழ்ந்து பாராட்டலானார்கள்.

இராமலிங்கம் பிள்ளைக்கு தேசிய முத்திரையோடு தேசியவாதிகளின் ஆதரவு கிடைத்தது.

தேசிக விநாயகம் பிள்ளைக்குப் பழைய பண்பாட்டி லிருந்து விலகிச் செல்ல விரும்பாத மிதவாதிகளின் ஆதரவு கிடைத்தது.

ச. து. சுப்பிரமணிய யோகியாருக்கு இலக்கிய, சொல் நயத்தை விரும்பிய ஒரு சிலரின் ஆதரவு இருந்தது.

மேலே குறிப்பிட்ட மூன்று கவிஞர்களும் அடி யெடுத்து வைக்கத் துணியாத புதிய துறையில் பாரதிதாசன் துணிந்து சென்ருர். அதனுல், அவரை நாஸ்திகக் கவிஞர், பிரசாரக் கவிஞர், சுயமரியாதைக் கவிஞர் என்று அவருக்குப் பட்டம் சூட்டி எதிர்ப்புத் தெரிவித்தனர். ஆனுலும் அவர் உறுதி தளராது பாடிக்கொண்டே இருந்தார்.

இளைஞர்கள், பகுத்தறிவுக் கொள்கையில் பற்றுள் ளோர் ஏராளமானவர்கள் பாரதிதாசனைப் பின்பற்றத் தொடங்கினர்.

அப்பொழுது நான் ரங்கூனில் இருந்தேன். பாரதி தாசனின் சஞ்சீவிபர்வதத்தின் சாரலை விரும்பிப் படித் தேன். அதன் பின்னர் நான் சென்னை வந்து கவிஞருடன் தொடர்பு கொண்டு முல்லைப் பதிப்பகத்தை நிறுவி, கவிஞர் நூல்களை வெளியிட முற்பட்டேன்.

அந்தச் சமயம், திரு. சின்ன அண்ணுமலை அவர்கள் தமிழ்ப் பண்ணை மூலமாக நாமக்கல் கவிஞரின் நூல்களை வெளியிட்டுக் கொண்டிருந்தார்.

திரு. அ. லெ. நடராஜன் அவர்கள் புதுமைப் பதிப் பகத்தின் மூலம் கவிமணியின் நூல்களை வெளியிட்டார்.

திரு. வி. ஆர். எம். செட்டியார் அவர்கள், ஸ்டார் பிரசுரத்தின் மூலம் ச. து. சு. யோகியாரின் நூல்களை வெளியிட்டார்.

மேற்கண்ட நான்கு கவிஞர்களின் நூல்களையும் வெளியிட்டோர் செட்டிநாட்டைச் சேர்ந்த நகரத்தார் சமூகத்தினரே.

பாரதிதாசனை ஒரு சாரார் எந்தக் கண்ணோட்டத்தில் பார்த்தனரோ அப்படியே என்னையும் பார்க்கத் தொடங்கினார்கள்.

அப்பொழுது, "நம்ம பையன்தான் பாரதிதாசன் நூல்களை வெளியிட்டு வருகிறானாமே; அவன் ஏன் இதைச் செய்கிறான்?" என பண்டிதமணி கதிரேசச் செட்டியார் அவர்கள் அங்கலாய்த்துக் கொண்டார்.

"முத்தையா, கவி போதும்; நமக்குக் கட்சி வேண்டாம்!" என தமிழ்ப் பெரியார் திரு. வி. க. அவர்கள் அறிவுறுத்தினார் என்னிடம்.

தமிழ்க்கடல் ராய. சொ.வும், கம்பன் புகழ் கூவும் சா. கணேசனும் கூட அந்தக் காலத்தில் கவிஞருக்கு எதிர்ப்புக் காட்டினார்கள்.

அந்த நாளில் ஒவ்வொருவருக்கும் தங்கள் கொள்கையில் உறுதி இருந்தது. லட்சிய ஆர்வமும் மிகுந்திருந்தது.

பதிப்பாளர்கள் கூட வியாபார நோக்கோடும் நூல் நிலைய விற்பனையைக் கருதியும் புத்தகங்களை வெளியிட்டதில்லை.

தேசிய எழுச்சியும், தெய்வபக்தியும் உண்மையாகவே அதிகரித்திருந்த காலம் அது. அத்தகைய சூழ்நிலையில் பல எதிர்ப்புகளுக்கிடையே பாரதிதாசன் உறுதியாக, படிப் படியாக முன்னேறினர். தமிழ் நாட்டின் பல பகுதி களுக்கும் சென்று சொற்பொழிவு நிகழ்த்தினர்.

பேராசிரியர் கி. சுவாமிநாதன் அவர்கள் 'ஹனுமான்' என்னும் வார இதழின் ஆண்டு மலரில், பாரதிதாசனின் கவிதைகளை விமர்சித்து நீண்ட கட்டுரை ஒன்று எழுதி யிருந்தார். அதன் இறுதியில், "பாரதிதாசன் நமது பழங் கலைகள் அனைத்தையும் தட்டிக் குப்புறக் கவிழ்த்துவிட்டு புதுத் தமிழ்நாடு ஒன்றை சிருஷ்டித்து, அதற்கு தானே கவிராஜனாக முயற்சிக்கிறார். அது வீண் முயற்சி" எனக் குறிப்பிட்டிருந்தார். அவருடைய கூற்றுப் பொய்யாகியது. இன்று தமிழ்நாட்டில், பாவேந்தர் பாரதிதாசன் நிகரற்று விளங்குகிறார்.

பாரதிதாசனைப் பின்பற்றிப் பாடுவோர் தொகை பாரதி தாசன் பரம்பரை என்ற பெயரில் உருவாகத் தொடங்கி வளர்ந்து வருகிறது.

பாரதியாருக்குப் பிறகு வாழ்ந்த கவிஞர்களில் 'பாரதி தாசனுக்கு உண்டான பெருமையும் சிறப்பும் வேறு எந்தக் கவிஞருக்கும் ஏற்படவில்லை. தம் வாழ்நாளிலேயே அந்தப் புகழைக் கண்டு களித்து இன்புற்றார் பாரதிதாசன்.

அவர் மறைந்த பிறகும் அந்தப் புகழ் தழைத்து ஓங்கி, ஆண்டுதோறும் அரசு விழா நடத்தி, பரிசுகளும் விருதுகளும் வழங்கி, கௌரவிக்கக் கூடிய நிலை உண்டாகி இருப்பதைக் காண தமிழ் நெஞ்சங்கள் எல்லாம் பூரிக் கின்றன.

"...ஒரு பரம்பரையை உண்டுபண்ணக்கூடிய வல்லமை உடையதாக இருத்தல் வேண்டும். ஒரு மனிதனுடைய தனியளவில் நின்று விட்டால் போதாது; பொதுமக்கள் அதை அங்கீகரித்தல் வேண்டும். அப்பொழுதுதான் அது நீடித்த பயனைத் தரவல்லது. பாரதிதாசனுடைய புரட்சி புதுமையாக உள்ளது. ஆற்றல் வாய்ந்தது. இவ்விரண்டு ஆற்றல்களும் நன்ருகப் புலப்படுகின்றன. இப்புரட்சியால் உண்டாகும் விளைவை எதிர்காலம்தான் மதிப்பிடுதல் வேண்டும்" என பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை அவர்கள், பாரதிதாசனைப் பற்றி 1946ல் எனக்கு எழுதியிருந்தார்.

சில ஆண்டுகளிலேயே பொதுமக்கள் பாரதிதாசனை அங்கீகரித்ததோடு ஒரு பரம்பரையே உருவாகியுள்ள வல்லமையையும் காண்கிருேம்.

தமிழ் நாட்டில் மட்டும் அல்லாமல் கடல் கடந்தும், தமிழ் பேசும் தமிழர்கள் வாழும் மாநிலங்களில் எல்லாம் பாவேந்தர் புகழ் பரவியது.

"......இந்நாட்டில் உண்மைத் தமிழர் தலையெடுக்கும் காலத்தில் இவர்க்கு உருவச்சிலை எடுப்பர்" என சொல்லின் செல்வர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் 1946-ல் எனக்கு எழுதியதில் குறிப்பிட்டிருந்தார்கள்.

அந்தச் சொல்லின் செல்வரின் சொல் தீர்க்கதரிசனமாகியது!

அறிஞர் அண்ணு அவர்கள் இந்த நாட்டின் முதல் அமைச்சராக வீற்றிருந்து ஆட்சி புரிந்தபோது, 1968-உலகத் தமிழ் மாநாட்டில் பாரதிதாசனுக்கு உருவச்சிலை கடற்கரையில் நிறுவிப் பெருமைப் படுத்தினர்.

பின்னர் புதுவை அரசினர் புதுவையில் கவிஞருக்குச் சிலைநாட்டி, நினைவு மண்டபம் எழுப்பி, கவிஞர் வாழ்ந்த

இல்லத்தை நினைவு நூலகமாக்கி, அவர் குடும்பத்துக்கும் உதவி புரிந்தார்கள்.

தமிழ் நாட்டில் வேறு எந்தக் கவிஞருக்கும் இத்தகைய பெருமை கிடைத்ததில்லை.

கவிஞர் மறைவுக்குப்பின் எங்கெங்கோ சிதறிக் கிடந்த பாடல்களைத் தொகுத்து 1978ல் பல நூல்களை வெளியிடச் செய்த கவிஞர் கோவேந்தன அவர்களுக்குப் பொன்னுடையும் கேடயமும் வழங்கியது புதுவை அரசு.

"பாரதிதாசன் நன்றாகக் கவிபாடுகிறார். ஆனால், அவர் பிராமணத் துவேஷி" என்று சிலர் கூறுகிறார்கள். பாரதிதாசன் பிராமணத் துவேஷி மட்டுமல்ல; மதத்தின் பேராலும், ஜாதியின் பேராலும், தர்மத்தின் பேராலும் யார் யார் கொள்ளையடிக்கிறார்களோ, யார் யார் மற்றவர்களை ஏமாற்றுகிறார்களோ, யார் யார் பிறர் உழைப்பில் உண்டு இன்பம் அனுபவிக்கிறார்களோ அத்தனை பேர்களையும் துவேஷிக்கிறார் பாரதிதாசன்"— இவ்வாறு உலகம் சுற்றிய தமிழர் ஏ. கே. செட்டியார் அவர்கள் 1944ல் குறிப்பிட்டார்.

ஆம் அது உண்மைதான்! அந்தக் கொள்கையிலிருந்து கவிஞர் இறுதிவரை மாறவே இல்லை.

—**முல்லை பிஎல். முத்தையா**

# 14

## நான் கண்ட பாவேந்தர்

பாவேந்தர் பாரதிதாசன் நேர்மையான உள்ளம் கொண்டவர்; அவருக்குச் சூழ்ச்சி தெரியாது; உண்மையையே எப்பொழுதும் பேசுவார்; மற்றவர்களிடமும்

உண்மையை மிகவும் எதிர்பார்ப்பார். ஆரவாரம் செய்பவர்களையும், பொய் பேசுபவர்களையும் அவர் அறவே வெறுப்பார்.

மேடையிலும், தனிப்பட்டவர்களிடமும் பேசும் பொழுது, தமக்குச் சரி எனத் தோன்றுவதை, ஒளிவு மறைவு இல்லாமல் உறுதியாக—உரமாகப் பேசும் வல்லமை உடையவர்.

குழந்தை உள்ளம் நிரம்பியவர்; யாரிடம் பேசினாலும் மிகுந்த உரிமையோடு பேசுவார். ஆண்—பெண் இருபாலாரிடத்தும் மிகவும் கலகலப்பாகவும் வாஞ்சையோடும் பேசக் கூடியவர்.

அழகான பொருள்களையும், இயற்கைக் காட்சிகளையும் ஆவலோடு பார்த்து ரசிப்பார்; மகிழ்ச்சி அடைவார்.

நல்ல உடை உடுத்திக் கொள்வதில் பிரியம் உடையவர். ஜிப்பா அணிந்து கொள்வார்; 'ஷெர்வானி' என்னும் நீண்ட அங்கியைப் போட்டுக்கொண்டு அவர் பவனி வந்தால் அது கண்கொள்ளாக் காட்சியாகும். உல்லன் அல்லது பட்டுச் சால்வை போர்த்துக்கொண்டே அவர் வெளியே புறப்படுவார்

ஒரு முறை பாவேந்தர் அணிந்திருந்த 'ஷெர்வானி' மீது நான் ஆசைப்பட்டேன்; உடனே கடைக்கு என்னைக் கூட்டிக்கொண்டு போய் பழுப்பு நிறத்தில் துணி எடுத்து, தெரிந்த தையற்காரரிடம் கொடுத்து தயாரிக்கும்படி கூறினார்; பிறகு என்னை அணிந்து கொள்ளச் சொல்லி அதைப் பார்த்து மகிழ்ந்தார். அந்த நினைவு இன்றும்கூட என் உள்ளத்தில் பசுமையாகப் பதிந்துள்ளது.

சோர்வு என்பதே கவிஞரிடம் இல்லை; நாளை என்பதும் இல்லை; எதையும் அப்பொழுதே நிறைவேற்ற

வேண்டும் என்ற துடிப்பு அதிகம். எப்பொழுதும் உற்சாக மாகவே காணப்படுவார்; எதற்கும் கவலைப்படமாட்டார்; அச்சம் என்பதே அவரிடம் இல்லை.

சத்தான-சுவையான உணவை விரும்பி உண்பார். சுவை மிக்க உணவு இல்லையானால் முகம் சுளிப்பார். தெரிந்த நண்பர்கள் வீட்டுக்குப் போகும் போது தமக்கு விருப்ப மான பதார்த்தங்களை தயாரிக்கச் சொல்லி ஆசையோடு சாப்பிடுவார். கறி, முட்டை, மீன், இரால் முதலானவற்றை மிகவும் விரும்பிச் சுவைத்துச் சாப்பிடுவார்.

தம் அருகில் பலர் இருப்பதை எப்பொழுதும் விரும்பு வார்; ஆனால் அதிகமாகப் பேசமாட்டார்; பேசும்பொழுது மெதுவாகவும் இனிமையாகவும் பேசுவார்.

இலக்கணம், இலக்கியம், கவிதை பற்றி விளக்கம் கேட்டால் உடனே தெளிவாக உவமான உவமேயங்க ளோடு, சலிப்படையாமல் விளக்கிக் கூறுவார். அவர் கூறு வதைப் புரிந்து கொள்ளாதவர்களைப் பார்த்து ஏளனமாகச் சிரிப்பார். அந்தச் சிரிப்பிலும் ஒரு கவர்ச்சி காணப்படும்.

கவிஞர் வாழ்நாளில் அவரைக் காணாதவர்கள் மிகவும் குறைவு. எளிதில் அவரைக் காணலாம்; பேசலாம்; பழக லாம். ஏழை—செல்வந்தர், சிறுவர்—பெரியோர், பாமரர்— படித்தவர் என்ற வேறுபாடு பார்க்கமாட்டார்.

திடீரென கவிஞருக்குக் கோபம் உண்டாகும் சந்தர்ப் பங்களும் உண்டு. என்றாலும் அந்தக் கோபம் உள்ளத்தில் நிலைத்து நின்று வேறுபடுத்தி விடுவதில்லை. 'நீர்கிழிய எய்த வடுப்போல மாறுமே சீரொழுகு சான்றோர் சினம்' என் னும் முதுமொழி அவருக்குப் பொருந்தும்.

கவிஞருடைய கோபத்துக்கு இலக்காகாதவர்கள் அவருடன் நெருங்கிப் பழகாதவர்களே! சில சமயங்களில்

அவருடைய கோபமானது அனுதாபமாக மாறிவிடுவதும் உண்டு. அது பிறவியில் உண்டான கவிஞர் இயல்பு போலும்.

எதிலும் அவர் போக்கும் இயல்பும் தனிச் சிறப்புடையன. அதனால்தான் அவர் புரட்சிக் கவிஞராய், பாரோர் புகழும் பாவேந்தராய்த் திகழ்ந்தார்.

ஒரே இடத்தில் வெகு நேரம் உட்கார்ந்து கொண்டிருக்க விரும்பமாட்டார். பலர் சூழ, வெளியே போய் வருவதில் அவருக்குப் பிரியம் அதிகம்.

சில சமயங்களில், அருகில் இருப்போரைப் பார்த்து, "எல்லோரும் வெளியே போய் வருவோமா" என்று கேட்பார். 'சரி' என்றதும் எழுந்து எங்கேனும் சிறிது தூரம் செல்வதும், சில கடைகளில் நுழைந்து எதையாவது வாங்குவதும், பிறகு திரும்பி வருவதும் வழக்கம்.

சினிமா, நாடகம், மற்றும் பல நிகழ்ச்சிகளுக்குப் போக விரும்புவார். உடனே உடை மாற்றிக்கொண்டு எல்லோருக்கும் முதலில் புறப்படத் தயாராக நிற்பவர் கவிஞர்தான்! மற்றவர்களும் உடன் வருவதற்காக காத்துக் கொண்டும், சிறு பிள்ளையைப் போல் மகிழ்ச்சி ததும்ப உலாவிக்கொண்டும் இருப்பார்.

பாரதியாரைப் பற்றி சுவையான நிகழ்ச்சிகளைக் கவிஞர் கூறும்போது மணிக்கணக்கில் ரசித்துக் கொண்டிருக்கலாம். அவ்வாறு பலமுறை கேட்டு ரசித்தவர்கள் பலர். எவ்வளவு முறை கேட்ட போதிலும் சலிப்புத் தோன்றாது. அவ்வளவு ரசனையோடு அழகாகக் கூறுவார். அடிக்கடி விரும்பிக் கேட்டவர் பலரில் நானும் ஒருவன்!

பாரதியார் பாடல்களையும் தம்முடையபாடல்களையும் பாவேந்தர் பாடினால் மெய்மறந்து கேட்டுக் கொண்டிருக்

கத் தோன்றும். அவருடைய குரலில் இனிமையும் கம்பீர மும் நயமும் கலந்து இன்பமூட்டும். பலமுறை கேட்டு, ரசித்து மகிழ்ந்தோர் பலர். அவற்றை எல்லாம் டேப்பில் பதிவு செய்து வைக்கவில்லையே என்ற குறை இப்பொழுது உண்டாகிறது.

படர்ந்த நெற்றி; நீண்ட கழுத்து; உயர்ந்த வெற்றித் தோள்கள்; கூர்மையான ஆனால் அமைதியான பார்வை, கட்டுக் கோப்பான உடல் அமைப்பு; மொத்த உருவமே வனப்பாகத் தோன்றும்.

எப்படி அவர் கவிதைக்கு இணை கூற முடியாதோ, அப்படியே அவருடைய உருவ அமைப்புக்கும் இணை இல்லை.

பாவேந்தர் வெளியே புறப்பட்டு விட்டால், மன்ன ரைப் போல அவருடைய தோற்றமும் நடையும் கம்பீர மாக இருக்கும். தெரிந்தவர்கள் நின்று வணக்கம் கூறு வார்கள்; தெரியாதவர்கள் நின்று பார்த்து 'யார்?' என பிறரிடம் விசாரிப்பார்கள். அத்தகைய தோற்றப் பொலிவு மிக்கவர். விரைவாக நடந்து செல்வார்; சில சமயங்களில் அவருடன் செல்வோர் பின் தொடர்ந்து ஓட நேரிடுவதும் உண்டு.

முகச்சவரம் செய்து கொண்டு முகம் மழ மழப்பாக இருக்கும்; தினமும் சோப்புத் தேய்த்துக் குளிப்பார்; தலைக்குத் தேங்காய் எண்ணெய் தடவி வாரிவிட்டுக் கொள்வார்; முகத்துக்குப் பவுடர் நறுமணம் பூசிக் கொள்ள விரும்புவார். நரை, திரை, மூப்பு அவரை அண்டியதே இல்லை. உள்ளம் இளமையாகவே இருக்கும்.

பெரும்பாலும் குப்புறப் படுத்துக்கொண்டே கவிதை எழுதுவார். சில சமயங்களில் உட்கார்ந்து எழுதுவதும் உண்டு.

அவர் இயற்றிய கவிதைகளை அவ்வப்போது துணை வியார் பழநி அம்மாள் அவர்களிடம் படித்துக் காண்பிப் பார். அம்மையார் கூறும் திருத்தங்களை ஏற்பதும் உண்டு.

இளமைக் காலத்தில் பீடி, சுருட்டு பிடிப்பார் 'பீடி பிடிப்பதில் உழைப்பு அதிகம்; பயன் குறைவு' என ஒரு முறை கூறினார். அதை விடுத்து, சிகரெட் தொடர்ந்து பிடிக்கத் தொடங்கினார்.

பாவேந்தரின் பேச்சின் தோரணை புதுமையாக இருக் கும். குயில் சிவா, பெரியசாமி, தமிழ் ஒளி, புலவர் நக்கீரன், மன்னர் மன்னன், பாலசுப்பிரமணியம் முதலா னோர் சந்தித்துப் பேசும் பொழுது பாவேந்தரைப் போலவே பேசி மகிழ்வோம். பேச்சின் தொனி, சாயல் அனைத்தும் அப்படியே அமைந்துவிடும். எங்களுக்கெல்லாம் அதுவே பெரிய ரசனையாகத் தோன்றும். கவிஞர் சுரதாவிடம் அந்தச் சாயல் அப்படியே இருக்கிறது.

பாவேந்தர் மறைந்து பல ஆண்டுகள் ஆகிவிட்டன. குயில் சிவாவும் கவிஞர் தமிழ் ஒளியும் மறைந்து விட்ட னர். இப்பொழுது இருப்பவர்கள் சிலர் ஒருவரை ஒருவர் காணும் பொழுது பாவேந்தருடன் நெருங்கிப் பழகிய நினைவுகளும் பேச்சுகளும் சாயலும் கண்கள் பனிக்க உள்ளத்தில் ஆறுதலை நிரப்புகிறது.

"உங்களைக் காணும்போது பாவேந்தர் நினைவு தோன்றுகிறது" என்றார் கவிஞர் கோவேந்தன் அவர்கள்.

பேராசிரியர்கள், எழுத்தாளர்கள், புலவர்கள், கவிஞர் கள் மற்றும் வாசகர்கள் என்னைக் காணும்போதெல்லாம் பாவேந்தரைப் பற்றியும் அவர் கூறியவற்றையும் மிக ஆவலோடு கேட்பார்கள். மகிழ்ச்சி நிறைந்த அந்தப்

பசுமையான நினைவுகளையும் பேச்சுகளையும் நினைவுபடுத்தி அவர்களுக்குக் கூறி மகிழ்வதோடு நானும் இன்புறுவேன்.

எழுத்தில் நிலையாக இருக்கவேண்டும் என பலரும் வற்புறுத்தினார்கள். அவர்களுடைய வற்புறுத்தலுக்காக முன்னர் நான் எழுதிய கட்டுரையே இது. வளரும் இளந் தலைமுறையினருக்கும் பாவேந்தரைப் பற்றி அறிந்து கொள்ள சிறிதளவாவது உதவும் என எண்ணுகிறேன்.

—முல்லை பிஎல். முத்தையா

## 15

## எளிமையாகப் பாடியது எப்படி?

புதுச்சேரியில் பாரதியார் வாழ்ந்திருந்த போது, ஒரு நாள் பாரதியார் இல்லாத சமயத்தில் அவர் தங்கியிருந்த இடத்துக்கு வந்த பாரதிதாசன், பாரதியார் மேசை டிராயரைத் திறந்திருக்கிறார். உள்ளே கவிதைகள் எழுதிய காகிதங்கள் பல கிடந்தன. எடுத்துப் படிக்க ஆரம்பித்தார் பாரதிதாசன். 'பாஞ்சாலி சபதம்' கவிதைகள் அவை.

"அது எழுதப்பட்டிருந்த முறை எனக்கு வியப்பைத் தந்தது. அதன் எளிமையைக் கண்டு திகைத்தேன். அன்று முதல் பாரதியின் எளிமையான நடையைப் பின்பற்ற முடிவு செய்தேன். அந்தக் கவிதைகளைப் படித்திருக்கா விட்டால், நான் இவ்வளவு எளிமையாகக் கவிதைகளை எழுத நினைத்திருக்க மாட்டேன்" என்றார் பாரதிதாசன்.

[இந்த நிகழ்ச்சியை கவிஞர் சுரதா அவர்களிடம் கூறி யுள்ளார் பாரதிதாசன். 7. 1. 1968 'ஆனந்த விகடன்' இதழில் வெளி வந்தது]

## 16

## பால் கறுப்பானது ஏன்?

பாரதியாரும் பாரதிதாசனும் பாரதியார் வீட்டு மாடியில் பேசிக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது பாரதியார் மனைவி செல்லம்மாள் அவர்கள் வெளியூர் சென்றிருந்தார்.

"சுப்புரத்தினம், உங்களுக்குப் பால் காய்ச்சத் தெரியுமா?" என்று கேட்டார் பாரதியார்.

"ஓ, தெரியுமே!" என்று கூறிவிட்டு, கீழே அடுக்களைக்கு வந்து பால் காய்ச்சினார் பாரதிதாசன்.

சிறிது நேரத்தில், ஏதோ சொல்ல நினைத்து பாரதியார் மாடியிலிருந்து வந்தார். "பால் காய்ந்து விட்டதா?" எனக் கேட்டார் பாரதிதாசனிடம்.

"பால் காய்ந்து விட்டது; ஆனால், பால் என்னவோ கறுப்பாகி விட்டது" என்றார் பாரதிதாசன்.

[பாலைக் காய்ச்சுவதற்கு, அடுப்பில் காகிதங்களைப் போட்டு நெருப்பு மூட்டி ஊதியிருக்கிறார். எரிந்த காகிதத் தூள்கள் பறந்து பாலில் விழுந்து பால் கறுப்பாகிவிட்டது.]

அதைக் கண்ட பாரதியார், "நம்மால் பாலைக் காய்ச்ச இயலவில்லையே. பெண்கள் எவ்வளவோ கஷ்டப்பட்டு சமையல் செய்கிறார்களே" என்று கூறினாராம்.

அதன் பின்னரே, 'பெண் விடுதலை', 'பெண் சமத்துவம்' முதலான பாடல்களை பாரதியார் பாடத் தொடங்கினார் என்று கூறினார் பாரதிதாசன்.

## 17

### இப்பொழுது வேண்டும்

ஒருசமயம் சென்னையில் பாவேந்தருடன் மன்னர் மன்னனும் நானும் மாலை நேரத்தில் சிற்றுண்டி விடுதிக்குச் சென்றோம்.

தோசை கொண்டு வரும்படி கூறினார் பாவேந்தர். வெகு நேரமாகியும் தோசை வரவில்லை. பாவேந்தருக்கோ பசியால் ஏற்பட்ட கோபம். உடனே, "ஏம்பா, தோசை இப்பொழுது சாப்பிடுவதற்காகக் கேட்டேன். நீ நாளைக்குக் கொண்டு வருவாயா?'' என்று கூறி எழுந்து விட்டார்.

'இதோ எடுத்து வருகிறேன்' என்று கூறி, உடனே போய் தோசை கொண்டு வந்தார்.

## 18

### பயமுறுத்தி வைத்திருக்கிறார்கள்

புரட்சிக் கவிஞர் பாரதிதாசனின் இல்லத்துக்கு ஒரு நாள் நாதசுர இசை மன்னர் ராஜரத்தினம் பிள்ளை வந்திருக்கிறார்.

கவிஞரும் இசை மன்னரும் பேசிக்கொண்டே இருந் தார்கள். இசை மன்னரால் சற்று நேரம் சும்மா இருக்க முடியுமா? அருகில் இருந்த தூணில் ராஜரத்தினம் பிள்ளை விரல்களால் தாளம் போட்டிருக்கிறார். தாளம் போட்ட தூணிலிருந்து வந்த ஓசையைக் கேட்டு "என்ன அது?'' என்று கேட்டவாறு வியப்புடன் எழுந்து நின்ற ராஜ ரத்தினம் பிள்ளை, பாரதிதாசனைப் பார்த்து "ஐயய்யோ! இந்தத் தூண் ஆச்சா மரத்தால் செய்தது!' என்றார்.

'ஆச்சாமரத்தை' வீடு கட்டப் பயன்படுத்த மாட்டார்கள். 'ஆச்சா ஆச்சா' என்று கேட்டு ஒரேயடியாக எல்லாவற்றையுமே முடித்துத் தொலைக்கும் என்று சொல்வது வழக்கம். ஆனால், ஆச்சா மரத்தால் நாதசுரம் செய்வார்கள்! ஆகவே, அந்த மரத்தை இனம் கண்டு கொண்டார் இசை மன்னர்.

ராஜரத்தினம் பிள்ளையின் துடிப்பைக் கண்டு சிரித்த பாரதிதாசன், "ஆச்சா மரமா இது. அதுதானே பார்த்தேன். நான் இதன் அருகில் உட்கார்ந்து கவிதை எழுத ஆரம்பித்தால், 'ஆச்சா ஆச்சா' என்று கேட்கும் போலிருக்கிறது. நான் சட்டென்று முடித்து விடுவேன்" என்றார். பிறகு, ஓர் அருமையான விளக்கத்தைக் கூறினார்:

"ஆச்சா மரத்தால் நாதசுரம் செய்கிறார்கள். அதை வீடுகளுக்கும் பயன்படுத்தினால், பிறகு நாதசுரம் செய்ய வழியில்லாமல் போய், அந்த இசைக் கருவியே மறைந்து போகும். அதற்காகத்தான் அந்த மரத்தைப் பற்றி அப்படி பயமுறுத்தி வைத்திருக்கிறார்கள்" என்றார் கவிஞர்.

[7. 1. 1968 'ஆனந்த விகட'னில் வெளிவந்தது.]



# மணிவாசகர் நூலகத்தின்
# சிறந்த வெளியீடுகள்

| | |
|---|---|
| கம்பர் | ... வ. சுப. மாணிக்கம் |
| சிந்தனைக் களங்கள் | ... ,, |
| ஒப்பியல் நோக்கு | ... ,, |
| தொல்காப்பியப் புதுமை | ... ,, |
| இலக்கிய விளக்கம் | ... ,, |
| உரையாசிரியர்கள் | ... மு. வை. அரவிந்தன் |
| மொழியியல் சிந்தனைகள் | ... ,, |
| பிளினி | ... வி. எஸ். வி. இராகவன் |
| பெரிப்ளூஸ் | ... ,, |
| மெகஸ்தனிஸ் | ... ,, |
| மார்க்கோ போலோ | ... ,, |
| தாலமி | ... ,, |
| பாஹியான் | ... ,, |
| யுவான் சுவாங் | ... ,, |
| பாட்டியல் திறனாய்வு | ... டாக்டர் ந. வீ. செயராமன் |
| சதக இலக்கியம் | ... ,, |
| சிற்றிலக்கியச் செல்வம் | ... ,, |
| பன்னூ இலக்கியம் | ... ,, |
| கபிலர் | ... ச. மெய்யப்பன் |
| தாகூர் | ... ,, |
| புதிய ஆத்திச்சூடிகள்-12. | ... ,, |

Wrapper Printed at Karpakam Achakam, Madras-600 002